ௐ

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாடு.

---

1897ஹு முதல் 1900ஹு முடிய

முறையே

கும்பகோணம், மதுரை, சேலம், உறையூர்

ஆகிய ஊர்களில் கூடிய

நான்கு மஹாநாடுகளின்

நடவடிக்கைகள்.

---

கும்பகோணம் மஹாநாடு அக்கிராசனர்:—

மதுரை பிரஹ்மஸ்ரீ V. S. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள்.

மதுரை மஹாநாடு அக்கிராசனர்:—

சேலம் பிரஹ்மஸ்ரீ பு. நா. அழகரய்யர் அவர்கள்.

சேலம் மஹாநாடு அக்கிராசனர்:—

உறையூர் பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி. கஸ்தூரி ரெங்கய்யர் அவர்கள்.

உறையூர் மஹாநாடு அக்கிராசனர்:—

மதுரை பிரஹ்மஸ்ரீ கௌடு. இராமலிங்கய்யர் அவர்கள்.

---

இவை

மதுரை ஸௌராஷ்ட்ர பிராஹ்மண எட்டாவது மஹாநாடு

உபசாரணைக் கமிட்டியாரால் மஹாநாட்டு நிதியிலிருந்து

அச்சிடப்பட்டன.

இதன் விலை அணா 4.

ஓம்

ஸ்ரீராமஜெயம்.

# सौराष्ट्र ब्राह्मण प्रथम सम्मेलनो। कुम्भकोणु।

# The First Sourashtra Brahmana Conference, Kumbakonam.

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மண முதலாவது மஹாநாடு, கும்பகோணம்.

---

துன்முகி௵ மாசிமீ 8, 9-உ க்கு 1897௵ பிப்ரவரிமீ 19, 20-உ களில் கும்பகோணத்தில் நடந்த முதலாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

அக்கிராசனர்.

மதுரை பிரஹ்மஸ்ரீ V. S. கிருஷ்ணசுவாமி ஐயர் அவர்கள்.

காரியதரிசி.

கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ C. N. கிருஷ்ணசுவாமி ஐயர் அவர்கள்.

இம்மஹாநாடு கும்பகோணம் ஸௌராஷ்ட்ர பிராஹ்மண தர்ம பரிபாலன சபையாரின் நன்முயற்சியால் நடைபெற்றது.

# தென்னிந்தியா ஸௌராஷ்டிர பிராஹ்மண முதலாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

---

இத்தென்னிந்தியாவில் ஸௌராஷ்டிர பிராஹ்மணர்கள் குடியேறின காலந்தொட்டு எல்லா ஊரார்களும் ஒன்றுசேர்ந்து மஹாநாடு கூடினதே இல்லையென்ற நோக்கத்துடன் இவ்வருஷம் நேருகிற மகாமக உற்சவ காலத்தில் ஸௌராஷ்டிர பிராஹ்மண முதலாவது மஹாநாடு கும்பகோணத்தில் கூடவேண்டுமென்று சில கனவான்கள் அபிப்பிராயப்பட்டதால் இக் குடந்தை ஸௌராஷ்டிர தர்ம பரிபாலன சபையின் அக்கிராசனாதிபதியவர்களால் 2—2—97-ல் நோட்டீஸ் மூலமாய் பிரசித்தஞ்செய்து ஒவ்வொரு ஊர்களிலிருந்தும் ஷை சபைக்கு இரண்டு பெயர்களுக்குக் குறையாமல் பிரதிநிதிகளை அனுப்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பட்டது.

அதன்படி மதுரை, பரமக்குடி, திண்டுக்கல், வீரவநல்லூர், விளாங்குளி, புதுர்குடி, சேலம், ராசிபுரம், நாமக்கல், திருச்சிராப்பள்ளி, உறையூர், தஞ்சாவூர், அம்மாப்பேட்டை, அம்மையப்பன், ஐயம்பேட்டை, வாலாஜாபேட்டை, சென்னை முதலிய பல இடங்களிலிருந்து பிரதிநிதிகள் விசேஷமாக வந்திருந்தார்கள்.

ஷை நோட்டீஸில் கண்டபடி துன்முகி௵ மாசி௴ 1௳ ஸ்ரீ வேத நாராயணசுவாமி சன்னதியிலும், 8௳ பிராஹ்மஸ்ரீ ஜி. வெ. பத்துருசாமி ஐயரவர்களின் கிருஹத்திலும் பிரதிநிதிகள் மீட்டிங் கூடி ஒன்று முதல் பத்து வரையில் சப்ஜெக்ட்டு குறிப்பிட்டு மறுநாள் 9௳ மாலை 3-மணிக்கு பிராஹ்மஸ்ரீ மு. ப. வெங்கிடாசலபதி ஐயரவர்கள் கிரகத்தில் அநேக மகா ஜனங்களுடன் எல்லா ஊர்களிலிருந்தும் வந்திருந்த பிரதிநிதிகளுங் கூடி அடியிற்கண்ட விஷயங்களைத் தீர்மானஞ் செய்தார்கள்.

இச்ஸௌராஷ்டிர பிராஹ்மண முதலாவது மஹாநாட்டிற்கு மதுரை பிரஹ்மஸ்ரீ V. S. கிருஷ்ணசுவாமி ஐயரவர்களை அக்கிராசனாதிபதியாகவும், கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ C. N. கிருஷ்ணசுவாமி ஐயரவர்களை காரியதரிசியாகவும் நியமிக்கவேண்டுமென்று சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. இராமசுவாமி ஐயரவர்கள் பிரேரபணை செய்து மதுரை பிரஹ்மஸ்ரீ K. V. சுப்பய்யரவர்களும் சபையார்களும் கேட்டுக்கொண்டு ஆமோதித்ததின்மேல் அங்கீகரிக்கப்பட்டது.

---

## மீட்டிங்கின் சப்ஜெக்ட்டுகள்.

1. பிரதி வருஷமும் இது போலவே ஸௌராஷ்டிரர்கள் வசிக்கும் முக்கிய பட்டணங்களில் மகா நாடு கூடி வரவேண்டுமென்பதாய் அக்கிராசனாதிபதியவர்களால் பிரேரபணை செய்யப்பட்டு கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ ஜி. வெ. பத்துருசாமி ஐயரவர்களால் நமது ஸௌராஷ்டிர மகாஜனங்கள் சகோதர பாவத்துடன் ஒன்று சேர்ந்து நம்மவர்களுக்குள்ளிருக்கப்பட்ட எல்லாக்குறைகளைப்பற்றியும் பிரதி வருஷமும் இப்படியே கூடி ஆலோசனையில் கொண்டுவருவதினால் விசேஷ பிரயோஜனங்களுண்டாகுமென்றும் இன்னுஞ் சில முக்கிய விஷயங்களையுஞ் சொல்லி ஆமோதித்தார்கள். சபையார்களும் கர கோஷத்துடன் அங்கீகரித்ததின் மேல் முடிவு செய்யப்பட்டது.

2. நமது சிறுவர்களுக்கு இத்தேச பாஷைகளுடன் ஸௌரசேனி என்ற நமது ஸௌராஷ்டிர தேச பாஷையின் லிபிகளையுஞ் சேர்த்துச் சொல்லிவைக்க வேண்டுமென்றும், இப்பாஷா மூலத்தையும், அதின் சூத்ரங்கள், வியாகரணங்களையும், மதுரை மகாகவி பிரஹ்மஸ்ரீ வெங்கிடசூரி ஐயரவர்கள் தமது ஆயுள் முழுவதும் செலவழித்து வெளிக்குக் கொண்டுவந்ததும், அதே பாஷையில் செய்திருக்கும் அனேக கிரந்தங்களைப் பற்றியும், அதின் பிறகு மதுரை பிரஹ்மஸ்ரீ தொ. இராமசுவாமி ஐயரவர்கள் நாளது வரையில் இப்பாஷா விஷயத்தில் விசேஷ பொருள் செலவழித்து எடுத்துக்கொண்டிருக்கும் சிரமத்தைப்பற்றியும், இன்னும் அது விஷயமாக நிரம்பவும் தெளிவாக நீண்ட பிரசங்கத்துடன் சேலம் பிரஹ்மஸ்ரீ ஸௌராஷ்டிர வித்வ சிரோன்மணியாகிய பு. அழகிரி ஐயரவர்களால்

பிரேரேபணை செய்யப்பட்டு மதுரை பிரஹ்மஸ்ரீ K. V. சுப்பய்யா வர்கள் ஆமோதிக்க எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

3. எவ்வகை நாகரீகத்திற்கும் தொழிலுக்கும் வர்த்தகத்திற்கும் கல்விதான் முக்கிய சாதனமாக இருக்கிறதென்றும் ஷை கல்வி விஷயத்தில் ஒவ்வொரு ஊரார்களும் கவலை எடுத்துக்கொண்டு தமிழ், தெலுங்கு, ஸமஸ்கிருதம், இங்கிலீஷ் இவைகளை கட்டாயம் படிக்கும்படி செய்விக்க வேண்டுமென்றும் அம்பாசமுத்திரம் பிரஹ்மஸ்ரீ சாது. ராமசுப்பய்யாவர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு சேலம் பிரஹ்மஸ்ரீ செம்பு. நரசிம்மய்யாவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

4. வேதாத்தியானம் நிரம்பவும் லோபித்து வந்திருக்கிறபடியால் நமது சிறுவர்களுக்காக அத்தியாயனச்சாலை வைத்து விருத்திக்கு கொண்டு வர வேண்டுமென்பதாய் சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. முராரி ஐயராவர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு மதுரை பிரஹ்மஸ்ரீ K. V. சுப்பய்யாவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

5. புரோஹிதத் தொழிலை நடத்தி வருகிற நம்மவர்களில் கும்பகோணம் ஆற்றங்கரை வழிநடப்பு ரெங்கய்யா அக்ரகாரத்திலும், மதுரை கிருஷ்ணன் கோவில் தெருவிலும், பரமக்குடி, அம்மையப்பன், ஐயம்பேட்டை முதலிய சில ஊர்களிலும் வசித்து வருகிற நம்மவர்கள் சுமார் 7, 8-வருஷ காலமாக நம் சுய பாஷையை சிறுகச்சிறுகக் கைவிட்டு தமிழும், தெலுங்கும் அப்பியசித்து வருகிறதுடன் நம்மவர்களிடம் சுஜாதி அபிமானமின்றி அவ்யகவ்வியாதிகளை கிரமப்படி நடத்திவைக்காமலிருப்பது யாவருமறிந்த விஷயமென்றும் ஆனலிப்போது ஷை புரோகித கிர்த்தியங்களை கிரமப்படி நடத்திவைக்கும்படியானவர்கள் மதுரை, சேலம் முதலிய இடங்களில் விசேஷமாக இருப்பதாகத் தெரிய வருகிறதினால் அப்படிப்பட்டவர்களை, தக்கவர்களைக்கொண்டு பரீக்ஷை செய்வித்து எந்தெந்த ஊர்களில் நம் சுஜாதி புரோகிதர்கள் லோபித்து வந்திருக்கிறதோ அவ்வவ்விடங்களில் அனுப்பி வேத விதிப்படி கிர்த்தியங்களை நடத்திவரும்படி செய்விக்கவேணுமென்று கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ ஜி. வெ. பத்துருசாமி ஐயாவர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு உறையூர் பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி. கஸ்தூரிரங்கய்யாவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

6. நம் சுஜாதியர்களுக்குள் மடாதிபதி இருக்கவேண்டியதவசிய மென்று கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ ஜி. வெ. பத்துருசாமி ஐயராவர்க ளால் பிரேரேபணை செய்யப்பட்டு உறையூர் பிரஹ்மஸ்ரீ அ. கஸ்தூரி ரங்கய்யாவர்களால் ஆமோதிக்கப்பட்டதின் மேல் அக்கிராசனாதிபதியவர் களால் இம்மடாதிபதி விஷயத்திற்ச் சொல்லியதாவது:—

நம்மவர்களுக்குள் சைவ, வைணவ, மார்த்துவ மென்ற மூன்று வகுப்பு இருப்பதினாலும், அதில் வடகலை, தென்கலையும் அதைச் சேர்ந்த சத்சம்பிரதாயமென்ற இராமானுஜ பள்ளமடை சித்தாந்தங்களும் பாகவத நாட்டாமை தாம்பூலாதி மரியாதைகளிலும் உடல், பொருள், ஆவி மூன்றை யும் பராதீனப்படுத்தி கக்ஷிப்பிரதி கக்ஷிகளும் நாட்டாமை காரியதரிசி நிய மன விஷயமாக இரண்டு பிரிவுடன் சின்னகக்ஷி பெரியகக்ஷி என்ற வீரா வேசத்திலிருந்து பந்து நியாய மரியாதை முதலிய போக்குவரத்தில்லாமல் வருஷக்கணக்காய் இருப்பதும் இன்னும் அது விஷயமாக இருக்கப்பட்ட யாவத் விபரங்களையும் சொல்லி மடாதிபதி விஷயம் பிந்தி ஆலோசிக்கலா மென்று தடுக்கப்பட்டது. அதின் மேல் பிரஹ்மஸ்ரீ ஜி. வெ. பத்துருசாமி ஐயராவர்களால் மேற்கண்ட யாவத் விஷயங்களும் இருப்பது உண்மையாக இருந்தபோதிலும் இப்போது நாம் கூடி முடிவு செய்யப்பட்டுவருகிற ஒவ் வொரு அம்சங்களை கவனிக்கும் பக்ஷத்தில் நம்மவர்களுக்குள் மடாதிபதி யென்ற பட்டமில்லாவிட்டாலும் ஆசார விசாரணைத் தலைவராக நம் சுஜாதி யர்களுக்குள் கற்றுணர்ந்தவர்களாகப் பார்த்து ஒருவரை நியமித்து அவர் கள் ஒவ்வொரு ஊர்களுக்கும் போய் புரோகிதர்கள் முதல் அவிடம் சபையைச் சேர்ந்த ஒவ்வொருவரைச் சந்தித்தும் அவ்விடத்திலிருக்கப் பட்டவர்கள் அனுஷ்டித்து வருகிறதை விபரமாக தெரிந்துகொண்டு வரு ஷந்தோறும் கூடும் மகா சபையாருடைய ஆலோசனையில் கொண்டுவரும் பக்ஷத்தில் மேற்சொல்லிய யாவத் விவாததுக்கங்களும் மெத்த சுலபமாக நிவர்த்தி செய்துகொள்ள மார்க்கமுண்டாகுமென்றும் ஆசார விசாரணைத் தலைவராக ஒருவரை நியமிக்கவேண்டிய தவசியமென்று மறுபடி பிரேரே பணை செய்ததின்மேல் மதுரை பிரஹ்மஸ்ரீ அல்லு. சீதாராமய்யாவர் களாலும், உறையூர் பிரஹ்மஸ்ரீ அ. கஸ்தூரிரங்கய்யாவர்களாலும், சென்னை பிரஹ்மஸ்ரீ K. மன்னாரய்யாவர்களாலும் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

7. எல்லா ஊரார்களுடைய திரவிய சகாயத்தினின்று நம் சுஜாதியர் களுக்காக வென்றே புண்ணியஸ்தலம் அதாவது காவேரி சங்கமமாகிற சமுத்திரதீரத்திலும், தனுஷ்கோடியிலும் சத்திரங்கள் ஏற்படுத்தவேண்டிய தவசியமென்று கும்பகோணம் பிரஹ்மஸ்ரீ தாசரி. வெங்கிடாசலபதி ஐயா வர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. இராம சுவாமி ஐயாவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப் பட்டது.

8. இப்பொழுது நம் சுஜாதியார்களின் நடை, உடை, ஆசாரங்கள் நல்ல ஸ்திதியில் வந்திருந்தபோதிலும் இன்னும் அது விஷயமாக சீர்திருத்த வேண்டியவைகளைப்பற்றி ஏழைகளை ஹிம்சிப்பதைப் பார்க்கிலும் திரவியஸ் தர்களாக இருப்பவர்கள் விடா முயற்சியுடன் அனுஷ்டிக்க வேண்டுமென்ப தாய் பரமக்குடி பிரஹ்மஸ்ரீ சொக்கலிங்கம். முத்துசாமி ஐயாவர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு, மதுரை பிரஹ்மஸ்ரீ குடுவா. குப்பய்யரவர் களால் (குட்கான். குப்பு ஐயர்) ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

9. கல்வியுடன் கைத்தொழில் சேர்த்து நடத்தும்படியான (டெக்கி னிகல்) ஸ்கூல் ஒன்று முக்கியமாக ஓரிடத்தில் ஸ்தாபிக்கவேண்டுமென் றும் அதனால் தேச தேசாந்திரங்களிலுள்ளதும் இத்தேசத்தார் ஆச்சரியப் படத்தக்க பலவித பேட்டு கொடிவேலைகளுடன் கூடிய நெசவுகளும், பல விதமான சாயங்களும் விருத்திசெய்துகொள்வதுடன் கல்வியுஞ்சேர்த்து நடத்திவருவதினாலுள்ள விசேஷ பிரயோஜனத்தைப்பற்றி விஸ்தாரமாக பிரஹ்மஸ்ரீ பி. ஏ., பி. எல்., எல். கே. துளசிராமய்யாவர்களால் பிரேரே பணை செய்யப்பட்டு, சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. வெங்கிடாசலபதி ஐய்ய ரவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

10. அடுத்தவருஷம் மதுரையில் மகாநாடு கூடவேண்டுமென்று பிரஹ்மஸ்ரீ அல்லு. சீதாராமய்யரவர்களால் பிரேரேபணை செய்யப்பட்டு ஷியூர் பிரஹ்மஸ்ரீ பி. ஏ., பி. எல்., எல். கே. துளசிராமய்யரவர்களால் ஆமோதிக்கப்பட்டு எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

இச்சபையின் அக்கிராசனாதிபதியவர்களுக்கும், சபை கூடுவதற்கிடங் கொடுத்த பிரஹ்மஸ்ரீ மு. ப. வெங்கிடாசலபதி ஐயரவர்களுக்கும் வந் தனமளித்து கரகோஷத்துடன் சபை கலைந்தது.

மேற்கண்ட மதுரை, பரமக்குடி, திண்டுக்கல், வீரவநல்லூர், விளாங்குளி, புதுக்குடி, சேலம், ராசிபுரம், நாமக்கல், திருச்சிராப்பள்ளி, உறையூர், தஞ்சாவூர், அம்மாப்பேட்டை, அம்மையப்பன், ஐயம்பேட்டை, வாலாஜாபேட்டை, சென்னை முதலிய ஊர்களிலிருந்து வந்திருந்த யாவத் பிரதிநிதிகளுக்கும் இக்குடந்தை ஸௌராஷ்டிர காரிய நிர்வாகசபையின் மெம்பர்களுக்கும், மறுநாளாகிய மாசிமீ 10உ ஷ்டி ஸௌராஷ்டிர தர்ம பரிபாலன சபையார்களால் தம் அக்கிராசனாதிபதியவர்களாகிய பிரஹ்மஸ்ரீ நாட்டாமை.ச. இராமசுவாமி ஐயரவர்கள் கிரஹத்தில் உபசாரணையோடழைத்தளிக்கப்பட்ட சமாராதனையில் எல்லா ஊரார்களும் சகோதர பாவத்துடன் அபேதஸ்தர்களாக இருந்து ஐக்யபத்திய புகழ்ச்சியுடன் தாம்பூலாதி மரியாதைகளைப் பெற்றுச் சந்தோஷத்துடன் ஸ்ரீ வரதராஜவேதநாராயணயோக நரசிம்ம மூர்த்திகளின் சேவை புரிந்தானந்தமடைந்தார்கள்.

1897-ளு பிப்ரவரிமீ 20உ

**V. S. கிருஷ்ணசுவாமி ஐயர்,**
அக்கிராசனாதிபதி,
ஸௌராஷ்ட்ர பிராஹ்மண முதலாவது மஹாநாடு.



ௐ

ஸ்ரீராமஜெயம்.

# सौराष्ट्र ब्राह्मण द्वतीय सम्मेळनो मधुरा ॥

# The Second Sourashtra Brahmana Conference, Madura.

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மண இரண்டாவது மஹாநாடு, மதுரை.

---

ஹேவிளம்பிஸு பங்குனிமீ 21, 22, 23உக்கு 1898ஸு ஏப்பிரல்மீ 2, 3, 4உகளில் மதுரையில் நடந்த இரண்டாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

அக்கிராசனர்.

சேலம் பிரஹ்மஸ்ரீ பு. நா. அழகரய்யர் அவர்கள்.

காரியதரிசி.

மதுரை பிரஹ்மஸ்ரீ வி. எஸ். இராமய்யர் அவர்கள்.

இம்மஹாநாடு மதுரை ஸௌராஷ்ட்ர பிராஹ்மண சபையாரின் நன்முயற்சியால் நடைபெற்றது.

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மண இரண்டாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

---

ஸௌராஷ்ட்ர ஜன பொது ஸௌக்கியத்தை உத்தேசித்து மதுரை ஸௌராஷ்ட்ர சபையார்களுடைய அபிப்பிராயப்படி மேற்படி சபை கௌரவ காரியதரிசி பிரஹ்மஸ்ரீ வி. எஸ். இராமய்யரவர்களால் தென்னிந்தியாவில் ஸௌராஷ்ட்ரர்கள் வசிக்கும் சகல இடங்களுக்கும் நோட்டீஸ் அனுப்பப்பட்டதின்பேரில், 1898௵ ஏப்பிரல்௴ 2, 3, 4 தேதிகளில் அவ்வவ்விடங்களிலிருந்து பிரதிநிதிகள் விஜயம்செய்து மேற்படி மூன்று நாட்களிலும் மதுரை ஸௌராஷ்ட்ர பிரைமரி பாடசாலையில் மஹாநாடு கூடி தினந்தோறும் சுமார் 1000 ஜனங்களுக்குக் குறைவில்லாமற் சேர்ந்தார்கள்.

## முதல் நாள் நடவடிக்கைகள்.

## 2—4—98.

1898௵ ஏப்பிரல்௴ 2-தேதி மாலை 5-மணிக்கு மதுரை ஸௌராஷ்ட்ர பிரைமரி பாடசாலையில் மஹாநாடு கூடி பிரஹ்மஸ்ரீ சேலம் பு. நா. அழகரய்யர் அவர்கள் மஹாநாட்டின் அக்கிராசனாதிபதியா யிருக்கவேண்டுமென்று மதுரை பிரஹ்மஸ்ரீ கே. வி. கிருஷ்ண பாகவதரவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, சேலம் பிரஹ்மஸ்ரீ புரோஹிதம். குப்பையரவர்களால் ஆமோதிக்கப்பட்டு, மதுரை பிரஹ்மஸ்ரீ கே. யஸ். பி. நன்னுசாமி பாகவதரவர்களால் ஆதரிக்கப்பட்டு சந்தோஷத்துடனும் கரகோஷத்துடனும் அங்கீகரிக்கப்பட்டது.

மஹாநாட்டில் பேசவேண்டிய முக்கிய விஷயங்களைப் பற்றியும் பிரேரேபகர், ஆமோதகர், ஆதரிப்பவர் முதலியவர்களை நிஷ்கரிசை செய்யும் பொருட்டும் அடியிற்கண்ட 21 கனவான்களும் ஒரு சப்கமிட்டியாக நியமிக்கப்பட்டார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரஹ்மஸ்ரீ | கிருஷ்ணசுவாமி பாகவதரவர்கள் | வாலாஜாபேட்டை. |
| 2. | ,, | புரோஹிதம் குப்பையர் அவர்கள் | சேலம். |
| 3. | ,, | பு. நா. அழகரய்யர் அவர்கள் | சேலம். |
| 4. | ,, | முராரி. இராமசுவாமி ஐயர் அவர்கள் | ,, |
| 5. | ,, | முராரி. முராரி ஐயர் அவர்கள் | ,, |
| 6. | ,, | புளியடி.முனிநாகேந்திர பாகவதர் அவர்கள் | மதுரை. |
| 7. | ,, | சோமலிங்கா. கிருஷ்ணசுவாமி ஐயர் அவர்கள் | ,, |
| 8. | ,, | கந்தாடை. இராமய்ய பாகவதர் அவர்கள் | ,, |
| 9. | ,, | நா. ம. சுந்தராமய்யர் அவர்கள் | சென்னை. |
| 10. | ,, | அனந்து. இராமசுவாமி பாகவதர் அவர்கள் | மதுரை. |
| 11. | ,, | கே. யஸ். பி. நன்னுசாமி பாகவதர் அவர்கள் | ,, |
| 12. | ,, | பூருளி. சுந்தராஜ பாகவதர் அவர்கள் | ,, |
| 13. | ,, | கெ. வி. கிருஷ்ண பாகவதர் அவர்கள் | ,, |
| 14. | ,, | கௌடு. இராமலிங்கய்யர் அவர்கள் | ,, |
| 15. | ,, | பாதே. முனிகுப்பையர் அவர்கள் | ,, |
| 16. | ,, | தொ. சீ. மு. சேஷய்யர் அவர்கள் | ,, |
| 17. | ,, | ஆர். வி. ரெங்கய்யர் அவர்கள் | ,, |
| 18. | ,, | ஜெ. கிருஷ்ணய்யர் அவர்கள் | ,, |
| 19. | ,, | என். கே. இராமலிங்கய்யர் அவர்கள் | ,, |
| 20. | ,, | குப்பா, வைத்தியம் முத்தூராமய்யர் அவர்கள் | ,, |
| 21. | ,, | குடுவா. குப்பையர் அவர்கள் | ,, |

1. மஹாநாட்டில் பேச நியமகமாயிருக்கிற கனவான்கள் தவிர மற்றவர்கள் அக்கிராசனாதிபதியவர்களுடைய உத்தரவின்றி பேசக்கூடாதென்றும்,

2. பிரசங்கிக்க ஏற்பட்டிருக்கிற கனவான்களில் ஒவ்வொருவரும் அக்கிராசனாதிபதியவர்களுடைய உத்தரவின்றி 10 நிமிஷத்திற்கதிகமாய் பிரசங்கிக்கலாகாதென்றும்,

3. அக்கிராசனாதிபதியவர்கள் ஸைலென்ஸ் பெல் அடித்தால் எவ்வித சப்தமும் அடங்கிவிடவேண்டுமென்றும்,

இம் மூன்று ரூல்களும் ஒவ்வொருவரும் அனுஷ்டிக்க வேண்டுமென்று சபையில் வாசித்துக் காட்டியதின் பேரில் அனைவராலும் அங்கீகரிக்கப்பட்டது.

## இரண்டாம் நாள் நடவடிக்கைகள்.

## 3—4—98.

1. பிரஹ்மஸ்ரீ கௌடு. இராமலிங்கய்யரவர்கள் சபைக்கு மிக்க வந்தனமளித்து நம்முடையவர்கள் யாவரும் சுஜாதியபிமானம் வைக்கவேண்டுமென்றும், நம்மவர்கள் அநேக இடங்களில் வசிக்கின்றார்களாகையால் நாம் எல்லோரும் ஒருங்கு கூடி நம்முடையவர்களில் தெளிந்த ஓர் விவேகியைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், ஏனென்றால் நம்முடையவர்களைப் பார்த்து இதர ஜாதியார் உங்களுக்காசிரியர் யாரென்றால் எல்லாம் தெரிந்திருந்தும் சொல்லமாட்டாது திகைக்கிறோமாதலால் பல இடங்களிலுள்ள நம்முடையவர்களின் சர்வஜன சம்மதமாய் ஆசார விசாரணைக் கர்த்தாவாக அவரை நியமனம் செய்யவேண்டு மெனவும் பிரேரேபித்தனர்.

பின்னர் பிரஹ்மஸ்ரீ வி. எஸ். இராமையரவர்களும், பிரஹ்மஸ்ரீ அல்லு. சீதாராமையரவர்களும், பிரஹ்மஸ்ரீ கெ. இராமய்ய பாகவதர் அவர்களும் மேற்படி விஷயமாய் நம்மவர்களில் தற்காலத்தில் ஆசார விசாரணைக் கர்த்தாவை நியமிப்பது சாத்தியப்படாதென்றும், ஆனால் மடாதிபதி மூலமாய் ஒருவரை நியமிப்பது உசிதப்படுமென்றும் அபிப்பிராய முறைத்தனர்.

பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதரவர்கள் நம்மவர்களிலேயே ஆசார விசாரணைக் கர்த்தாவை நியமிப்பது நலமென்றும், இதுவரையில் ஆசார விசாரணைக் கர்த்தாவை நியமித்திராவிடினும் இனிமேலாவது நியமிக்கவேண்டு மெனவும் ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் இதர வகுப்பினர் நம்மவர்களுக்கு ஆசார விசாரணைக் கர்த்தாவாயிருப்பதிலும் நம்மவர்களில் ஒரு நன்குணர்ந்தவரை நியமிப்பதே தகுதி யென்றும், ஆனால் மடாதிபதி யென்ற நாமமில்லாமல் ஆசார விசாரணைக் கர்த்தாவென்று பெயரிட்டு நம்மவர்களிருக்கும் பல இடங்களிலும் சென்று ஆசாரக் குறைவுகள் ஏற்பட்டிருந்தால் அதுகளை அப்போதைக்கப்போது நிவர்த்திசெய்ய அவர்களுக்கதிகாரங் கொடுக்கவேண்டுமெனவும், யாரை நியமிப்பதென்பதைப்பற்றி மாத்திரம் அடுத்தவருஷம் கூடும் மஹாநாட்டில் ஆலோசிக்க வேண்டுமெனவும் சபையோருக்கு சாற்றினதின் பின் சபையோர் யாவராலும் மிக நேசத்துடனும் கரகோஷத்துடனும் அங்கீகரித்துத் தீர்மானிக்கப்பட்டது.

2. பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதரவர்கள் அந்தந்த ஜாதியாருக்குத் தக்கபடி கர்மானுஷ்டானங்கள் புரிய வேண்டுமென்று வேதோக்த மேற்பட்டிருப்பதினால் நம்மவர்கள் அநாதியாக வேதோக்த கர்மங்கள் புரிபவர்களென்றும், அவ்விதம் செய்பவர்களுடைய முகத்திற் செவ்விதாய்ப் பிரம்ம தேஜசு பிரகாசிக்குமென்றும், ஆகையால் ஸௌராஷ்ட்ரர்கள் யாவரும் வேதோக்த கர்மானுஷ்டானங்களையே நழுவவிடாது நடத்திவர வேண்டுமென்றும் பிரேரேபித்ததின் பேரில், பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசுவாமி ஐயரவர்களால் ஆமோதிக்கப்பட்டு, பிரஹ்மஸ்ரீ மாணிக்கா. சங்கரநாராயண ஐயரவர்களால் ஆதரிக்கபபட்டு, அக்கிராசனாதிபதியவர்களாலும் சபையோர் யாவராலும் கரகோஷத்துடனும், விசுவாசத்துடனும் அங்கீகரிக்கப்பட்டது.

3. பிரஹ்மஸ்ரீ கெ. இராமய்ய பாகவதரவர்கள் சபையோருக்கு வந்தனமளித்து தற்காலம் இங்கிலீஷ் இராஜாங்கமாகையால் இங்கிலீஷ் பாஷையே அனைவரும் விருத்திசெய்யவேண்டுமென்றும், எந்தெந்த இராஜாங்கத்தில் எந்தெந்த பாஷைகளை விருத்திசெய்ய வேண்டுமோ அந்தந்தபாஷைகளையே சொந்த பாஷைகளாகப் பாவித்து விருத்திசெய்யவேண்டுமென்றும், அதற்காகத் தகுந்த பண்டு ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ ஜெ. கிருஷ்ணய்யரவர்கள் நம்மவர்களில் அநேகர் வர்த்தகர்களாயிருக்கிறார்கள். கன்னியாகுமரி முதல் இமயகிரி வரையில் இங்கிலீஷ் பாஷையொன்று மாத்திரங் கற்றிருந்தால் இலகுவாய் யாதோரு தவியில்லாமல் எல்லா வர்த்தகங்களும், இதர தொழில்களும் செய்ய ஹேதுவாயிருக்குமென்றும், நம்மவர்களில் அநேகர் பலவித கஷ்டங்கள் அனுபவிக்க நேரிடுவது இப்பாஷை யொன்றில்லாக் குறைவு தானென்றும் ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் நம்மவர்களில் அநேகர் சர்க்கார் நிபந்தனைகளை அறியாமல் அகப்பட்டு அவதிப்படுகிறார்கள். ஆகையால் அப்பாஷையை அவசியம் அபிவிருத்தி செய்ய வேண்டுமென சபையோருக்கு அறிவித்துரைத்ததின் பின், சபையோரெல்லோராலும் இஃதுண்மையெனக் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

4. பிரஹ்மஸ்ரீ கொ. மா. இரங்கசாமி பாகவதரவர்கள் இங்கிலீஷ் பாஷையை விருத்தி செய்வதோடுகூட சமஸ்கிருத பாஷையையும் நம்

ஸௌராஷ்ட்ர லிபியையும் அதிகமாய் விருத்திக்குக் கொண்டுவர வேண்டு மென்றும் பிரியத்துடன் பிரேரேபித்ததின் பேரில்,

பிரஹ்மஸ்ரீ கே. யன். இலட்சுமணய்யரவர்களும், பிரஹ்மஸ்ரீ குப்பா. வைத்தியம் முத்துராமய்யரவர்களும் அவ்விஷயத்தை முன்னிட்டு உபரி யாயுரைத்து ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் சமஸ்கிருதத்திலிருந்து பிராகிருத முதலான ஆறுபாஷைகள் உற்பத்தியென்று பற்பல சாஸ்திரோக்தங்களால் துலக்கியும், நாம் வழங்கும் பாஷையும் அதில் ஒன்றாயிருப்பதினால் அதை நம்மவர்கள் விசேஷமாய் பிரசித்திக்குக்கொண்டுவராமல் உலோபிக்கும்படிசெய்திருப்பது நலமல்லவென்றும், ஆகையால் நம்மவர்கள் வசிக்கும் பற்பல இடங்களிலும் மேற்படிபாஷையை வெகுவாய் அபிவிருத்திக்குக்கொண்டுவர வேண்டுமென் றும் சபையில் சவிஸ்தாரமாய் உபந்நியாசித்ததின் மேல் சபையோரெல் லாராலும் கரகோஷத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டது.

5. பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதரவர்கள் வேதாத் தியாயனம் வேதியர்களுக்கத்தியாவசியமாகையால் அதற்காகப் பலஇடங்களி லும் தகுந்த சம்பளம் கொடுத்து வேத பாடசாலைகள் ஏற்படுத்தி அப்பிய சித்து வருகிறார்கள். அஃதொன்று நம்மவர்களுக்கு மிகவும் குறைவாயிருக் கிறது. ஆகையால் நாம் இப்பொழுது அத்தியாவசியமாய் அதைக் கவனிக்க வேண்டுமென்று பல திருஷ்டாந்தங்களெடுத்துரைத்து அதை அப்பியசிக்க வேண்டுமானால் சமஸ்கிருதத்தை அவசியம் கற்பிக்கவேண்டுமென்றும் சமஸ் கிருத பாடசாலைகள் இன்னும் ஏற்படுத்தவேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ தி. செல்வரெங்க ஜோசியரவர்கள் அது விஷயமாய் மிகவும் உரைத்து ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ சேலம் முராரி. முராரிஐயரவர்கள் சமஸ்கிருதம் அத்தியாவசி யம் கற்பிக்கவேண்டுமென்று ஆதரித்ததின்மேல் அக்கிராசனாதிபதியவர்கள் சமரீ மிருகத்தின் கேசம் சாமானியமாய்க் கிடைப்பதரிது. அது தேவர்க ளுக்குத்தான் உரித்தானது. அதுபோல் சமஸ்கிருதம் மிகவும் அருமையாய்த் தான் புலப்படுகிறதென்றும், சகலருக்குங் கிட்டுவது கஷ்டமென்றும், அது தேவ பாஷையாதலால் சமஸ்கிருதம் தெரிந்தால் தான் வேதாகமங்களைச் சாதாரணமாய் அறிந்து கொள்ளலாமென்றும், வேதாத்தியாயனத்தை நாம்

இப்பொழுது மிகுதியாய் முன்னுக்குக் கொண்டுவர முயலவேண்டுமென்றும், சபையோருக்குத் தெரிவித்ததின்மேல் சபையோரெல்லோராலும்மிக நேசத் திடனும் கரகோஷத்துடனும் ஒப்புக்கொள்ளப்பட்டு பைசல் செய்யப் பட்டது.

6. பிரஹ்மஸ்ரீ அனந்து. இராமசுவாமி பாகவதரவர்கள் பத்திரிகைகள் அதிகமாய் இங்கிலீஷில் அச்சிட்டு வருகின்றமையால், நாம் இப்பொழுது கிஞ்சித்துத் தான் தெரிந்து கொள்கிறோம். ஆகையால் தமிழ் பாஷையிலேயே நம்முடைய வர்த்தமானங்களை தெரிவித்தால் விசேஷமாய் அறிந்து கொள்ளலாமென்றும், இராஜாங்கம், பொது நன்மை, வர்த்தகம், கைத்தொழில், போஸ்டு, தந்தி, ரெயில்வே சமாசாரங்கள், வர்த்தக விதரணை, அதிக நஷ்டமடையாதிருக்கும் உபாயங்களும், உள்ளூர், வெளியூர் சமாசாரங்களும் எளிதாய் அறிந்துகொள்ளலாமென்றும், ஆகையால் தமிழ் பத்திரிகை யொன்று பிரசுரஞ் செய்தனுப்புவது பிரயோஜனமென்றும் பிரேரேபித்தனர்.

ஸௌராஷ்ட்ர உபந்நியாச சபை கௌரவ காரியதரிசி பிரஹ்மஸ்ரீ என். சுந்தர ராவ் அவர்கள் சபையோருக்கு வந்தனம் சாற்றி தமிழ் பத்திரிகைகள் ஏற்பட்டால் நம்மவர்கள் இருக்குமிடத்தி லிருந்துகொண்டே சகல சங்கதியையும் சங்கடமின்றி சுலபமாய்த் தெரிந்து கொள்வார்களென்றும், இதர வகுப்பார் ஒவ்வொருவரும் குறைந்த பக்ஷம் ஓரோர் பத்திரிகை பிரசுரஞ்செய்து வெளியிடுவார்களென்றும், அதுபோல் நம்மவர்களுக் கென்றே ஓர் பத்திரிகை பிரசுரஞ்செய்து பிரசித்தப்படுத்துவது மிகச் சிலாக்கியமென்றும் ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ டி. வி. பாலுசாமி ஐயரவர்கள் இங்கிலீஷ் பாஷை விருத்திசெய்து தேச பாஷை அசட்டை செய்வது கூடாதாகையால் தமிழ் வாராந்தரப்பத்திரிகைஒன்று ஊர்ஜிதப்படுத்த வேண்டுமென்று ஆதரித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் இந்த விஷயம் அத்தியாவசியமென்று சபையோருக்குச் சாற்றினதின்பின் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

## மூன்றாம் நாள் நடவடிக்கைகள்.

## 4—4—98.

7. சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. இராமசாமி ஐயரவர்கள் நம்மவர்களில் எல்லாரும் திரவிய சகாயம் நிரம்பவும் செய்ய வேண்டுமென்றும், அதைக் கொண்டுதான் கல்விச்சாலை, தொழிற்சாலை முதலியவைகள் ஏற்படுத்தி ஏழை அநாதைக் குழந்தைகளை இரட்சிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ சி. மு. வெங்கிடாசலபதி ஐயரவர்கள் அனைவருக்கும் கல்வியே முக்கிய ஆதாரமென்றும், நம்மவர்கள் கல்விகற்கும் விஷயத்தில் பின்னடைந்தவர்களாயிருப்பதால், அவர்களை முன்னுக்குக் கொண்டுவர ஓர் பண்டு ஏற்படுத்த வேண்டுமென்றும், கல்வியோடு கைத்தொழிற்சாலைகள் ஏற்படுத்தி ஏழை அநாதைகளை இரக்ஷிக்க வேண்டுமென்றும் ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ கே. யன். இலட்சுமணய்யரவர்கள் தரும சிந்தனையை நாம் ஒவ்வொருவரும் நிர்வகிக்கவேண்டுமென்றும், பெங்களூரில் ஓர் அநாதரக்ஷக பாடசாலை ஏற்பட்டிருக்கிறதென்றும், தரும சிந்தனை இல்லாதவர்களது செல்வம் பிறரால் வவ்வப்படுமென்று தேனீ முதலிய பற்பல திருஷ்டாந்தங்களுடன் சொல்லி, நாம் நல்வழியிலிருந்தீட்டிய பொருளை நல்வழியிலேயே சிலவிடுவது நன்மை எனவும், தரும சிந்தனையுள்ளவர்கள் சிவிகையில் ஏறுகிறார்கள், அஃதில்லார் அதனை சுமக்கிறார்களென்றும் பிரத்தியட்சமாகத் தெரியப்படுத்தினதுமல்லாமல், அவசியமாய் ஓர் அநாதரக்ஷக பாடசாலை ஏற்படுத்தவேண்டுமெனவும் ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ கெ. இராமய்ய பாகவதரவர்கள் ஒவ்வொரு ஜாதியிலும் அநாதரக்ஷக பாடசாலையுண்டென்றும், ஐரோப்பியர்கள் கல்விச்சாலை, வைத்தியசாலை இவைகளையே முக்கிய தருமமாகக் கருதிச் செய்கிறார்களென்றும் உரைத்தனர்.

பிரஹ்மஸ்ரீ முசுவாதி. சுந்தராஜய்யரவர்கள் கல்வியே மிகசிலாக்கியமென்றும், அநாதரக்ஷக பாடசாலை ஏற்படுத்துவதசிய மென்றும், தற்காலம் நம்மவர்களுடைய காலக்ஷேபம் கொஞ்சம் சரியாயில்லாததினால் இவ்வெண்ணம் இப்பொழுது உதித்திருப்பது மிக உசிதமென்றும் உரைத்தனர்.

பிரஹ்மஸ்ரீ ஓ. டி. அனந்தகிருஷ்ணப்பரவர்கள் நம்மவர்கள் வறுமையினால் தங்களருமைக் குழந்தைகளைக் கல்விகற்பிக்கச் செய்கிறார்களில்லையென்றும், ஜெர்மனி தேசத்தில் கட்டாயமாய்த் தங்கள் தங்கள் குழந்தைகளைக் கல்வி கற்பிக்கவும், மிலிடரி சேவகத்திற் பழகவும் வேண்டுமென்று ஏற்பட்டிருக்கின்றமையால் அங்கேயுள்ளவர்கள் எல்லாவிதத்திலும் மேம்பாடடைந்திருக்கிறார்களென்றும், பல்லாரி ஜில்லாவில் ஒருவர் கவர்ண்மென்டாருடைய பேருதவியைப் பிரதானமாய்க்கொண்டு அநாதைப் பிள்ளைகளை நானாவிதமாகச் சீர்திருத்தி மிக்க மேம்பாட்டிற்குக் கொண்டு வருகிறாரென்றும், அதுபோல் நம்மவர்களுடைய ஏழை அநாதைப்பிள்ளைகளை இரக்ஷிக்க வேண்டுமென்றும் இயம்பினர்.

சக்தியில்லாதவர்களை மட்டுமல்ல, தாய், தந்தையில்லாச் சிறுவர்களையும் இரக்ஷிப்பது கனதனவான்கள் கடமையென்றார், அவர்களை கிருதக்கிருத்தியங்களைப் புரிய வைத்துக் கொள்ளுகிறோமென்றும், நாம் அவ்வாறு செய்யாது இனிமேலாவது பகலிலும் இரவிலும் பள்ளிக்கூடங்கள் அமைத்துப் படிப்பிவிக்கவேண்டுமென்றும், அதற்காக வேறொரு பண்டு ஏற்படுத்தி அதிலிருந்து சிலவு செய்ய வேண்டுமென்றும், நாம் ஒரே ஒருவிதமான தொழிலைச் செய்யக்கூடாதாகையால், இந்த அநாதரக்ஷக பாடசாலையிற் பற்பல தொழில்களையும் அற்புதமாய்க் கற்பிக்கவேண்டுமெனவும் அக்கிராசனாதிபதியவர்கள் வற்புறுத்துரைத்ததின்பின், சபையோரெல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டது.

மதுரை ஸௌராஷ்ட்ர ஸபை கௌரவ காரியதரிசி பிரஹ்மஸ்ரீ வி. எஸ். இராமய்யரவர்கள் பேருக்கு வெளியூரிலிருந்து வந்த லெட்டர்களில் பெரியகுளம் ஸௌராஷ்ட்ர ஸபையிலிருந்து வந்த லெட்டரை வாசித்து வெளியிட்டனர்.

8. பிரஹ்மஸ்ரீ கே. வி. கிருஷ்ண பாகவதரவர்கள் சபையோருக்கு அநேக வந்தனம் அன்புடனளித்து யாவற்றிற்கும் கல்வியே பிரதானமென்றும், பி. ஏ. பரீக்ஷை கொடுத்துக் கவர்ண்மென்டாரிடம் கவுனை பெற்றுக் கொள்ளும்போது கனம் பொருந்திய கவர்னரவர்களிடம் பொது நன்மை முதலிய நற்காரியங்களில் பிரவேசிப்பதாய்ப் பிரதிக்ஞை செய்கிறார்களென்றும், உபன்னியாச ஸபையிற்கூடி எக்குறைகளையுங் கவனிக்கவும், சமாசாரப் பத்திரிகை முதலியவைகளை வாங்கி வாசிக்கவும் செய்ய வேண்டுமென்றும்,

ஏனெனில், ஜப்பான் தேசத்தார் கல்வி கற்றதினுல் மிகவும் தேர்ச்சி யடைந்திருக்கிருர்களென்றும், சபை கூடுவதால் பல சங்கோசங்கள் தீரு மென்றும், நாம் குறிப்பிட்ட காலத்தில் வரும்படி பழகவேண்டுமென்றும், சபை கூடுவதால் ஐக்கிய முண்டாகிறதென்றும், பலபேர் சேர்ந்து தீர்மா னிப்பதுதான் ஊர்ஜிதத்திற்கு வருமென்றும், மாட்சிமை தங்கிய சென்னை கவர்னரவர்களை வந்தனேபசாரப் பத்திரிகையுடன் சந்தித்ததும், அவர்கள் அதற்கு விடையளித்ததும் தங்களுக்களித்திருக்கிற புத்தகத்தினுல் நன் ருய்த் தெரிய வருமென்றும், கையெழுத்துப் போடமட்டுந் தெரிந்து கொண் டதனுல் படித்தவர்களாகமாட்டார்களென்றும், கௌரவந்தங்கிய ருஷியா சக்கரவர்த்தி பத்திரிகையாற் பலபயனடைகிறேனென்று சொன்னதா கவும், பிரஹ்மஸ்ரீ கனம் பொருந்திய ஹைக்கோர்ட் ஜட்ஜி முத்துசாமி ஐய்யரவர்கள் பேனுவானது உலகத்தை அடக்கி அரசாளுகிறதென்று பேசியிருப்பதாகவும், பெண்கல்வியால் குடும்பத்திற்கு வேண்டிய சகல சௌகரியங்களையும் எளிதாய்ச் செய்து கொள்ள ஹேதுவாய் இருக்குமென் றும், அப்படியிருக்கப் பெண்கல்வியாற் கற்பழியுமென்றுரைப்பது தப்பென் றும், பெண்கல்வியால் இல்லற தருமமும், புகழும், மரியாதையும் அதிக ரிக்குமென்றும் உரைத்து இப்பேற்பட்ட பிரயோஜனங்களெல்லாமடைய ஒவ்வொரு ஊரிலும் உபந்நியாச சபைகள் ஏற்பட வேண்டுமென்று பிரேரே பித்தனர்.

பிரஹ்மஸ்ரீ குப்பா. வைத்தியம் முத்துராமய்யரவர்கள் அவ்வாறு புரிதல் நலமென அன்போடு ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ ஓ. கே. எம். இராமய்யரவர்கள் சபைக்குச் செல்வதாற் பலவித சற்குணங்களுண்டாகும். எவ்வாறெனில், ஆற்றில் அநேகரேகித் தண்ணீரைக் கலக்கினுல் தான் தெளிவடைகிறது; அத்தன்மை போல பலபேர்களொன்ற சேர்ந்து பற்பல விஷயங்களை ஆராய்வதால் கற்றவர் களும் மற்றவர்களும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகிய நல்லறிவு உதிக்கு மெனவும், சபைக்குச் சென்று பேசவேண்டுமென்ற எண்ணமானது ஆயிரத்திலொருவருக்கே சிலாக்கியமாகப் புலப்படுமென்றும், ஆகையால் சபை கூடுமிடந்தோறும் பேச அஞ்சாதிருக்க வேண்டுமென்றும், அப்படிச் செய்வதால் நியாயஸ்தலம் முதலிய இடங்களிற்சென்று விவகாரங்களைப் பரிஷ்காரமாய் விளப்பத்திறமுண்டாகு மென்றும், இத்தியாதிகாரணங்

களுக்கும் ஹேதுவாகிய உபந்நியாச சபைகள் பற்பல இடங்களிலும் இருக்க வேண்டுமென்றும் ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள், வியாசர், பாராசர், அகஸ்தியர், விஸ்வாமித்திரர் முதலிய மஹாரிஷிகள் தங்கள் தங்கள் மாணாக்கர்களை வைத்துக்கொண்டு ஜீவாத்மா, பரமாத்மாவைப் பற்றியும் இன்னுமநேக இரகஸியார்த்தங்களைப் பற்றியும் இங்கிதமாய் உபந்நியாசமே செய்திருக்கிறார்களென்றும், ஆகையால் உபந்நியாச சபைகள் பல இடங்களிலுங்கூடி இன்னின்ன காலத்தில் இன்னின்னவை பேசவேண்டுமென்பதாய்த் தீர்மானித்துக் கொண்டு வாரத்துக்கொருமுறை அல்லது மாதத்திற்கிருமுறை அல்லது குறைந்தபக்ஷம் மாதத்திற்கொருமுறையேனும் பேசிவருவதே மிக உசிதமென்றும், நம்மவர்கள் பெரியகுளத்திலும் ஓர் சபை ஏற்படுத்தியிருப்பது மிக நலமென்றும், சபையோருக்கு அறிவித்ததின் பின் அனைவராலும் சபைகள் ஏற்படுத்திப் பிரசங்கித்து வருவதே தகுதியெனக் கரகோஷத்துடன் தீர்மானித்து முடிவுசெய்யப்பட்டது.

9. பிரஹ்மஸ்ரீ தொ. சீ. மு. சேஷய்யாவர்கள் கல்வியே காசினியிற் சிறந்த செல்வமென்றும், ஆகையால் தான் ஒவ்வொருவரும் அதைப்பற்றிச் செவ்வையாய்ச் செப்ப நேரிடுகிறதென்றும், கல்வியென்ற சூரியனொன்றிருந்தால் உலகத்திலுள்ள பற்பல விஷயங்களைச் சுலபமாய் உள்ளங்கை நெல்லிக்கனி போல உள்ளவாறறிந்து கொள்ளலாமெனவும், ஆகையால் ஆண் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிப்பது போலவே பெண் பிள்ளைகளுக்கும் கல்வி கற்பிப்பது மிகப் பிரயோஜனமாகுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ குப்பா. வைத்தியம் முத்துராமய்யாவர்கள் கல்விக்கு அதிதேவதை சாரதமாதாவாகிய சரஸ்வதியாயிருக்கிறபடியால் பெண் கல்வியைக் குறித்து குறைசொல்வது உசிதமல்ல. அக்கல்வியைக்கற்க குருவை வணங்கவேண்டியதவசியம். மைசூர், மலையாளம் முதலிய இடங்களில் பெண்கல்வியோடு கூட வீணை முதலியவைகளையும் கற்பிக்கிறார்கள். ஆகையால் அவ்விடங்களில் கலைமகள் வாழ்க்கை நன்றாய்ப் பிரகாசிக்கின்றது. ஆதலால் திரவியம் செலவழித்துப் பாலிகாபாடசாலைகளை அலட்சியம் செய்யாது கட்டாயமாய் நடத்திவரவேண்டுமென்று பல திருஷ்டாந்தங்களுடன் ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் பெண்பிள்ளைகளைப் பாலியத்திற் கல்வி கற்பிக்கவேண்டியது அத்தியாவசியமென்றும், உதாரணமாக, ஸ்ரீராமமூர்த்தி ஆஞ்சநேயரிடம் தன் கணையாழி மோதிரத்தை ஜானகியாரிடம் அளிக்கும்படி அனுப்பினர்; உருக்குமணி தேவியார் லெட்டரெழுதித் தன்னபிப்பிராயத்தை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு அறிவித்திருக்கின்றனர்; எனவே, பெண் பிள்ளைகளைப் படிப்பிக்கவேண்டிய தவசியமென்று சபையோரும் அபிப்பிராயப்பட்டுக் கரகோஷத்துடன் தீர்மானித்து முடிவு செய்யலாயிற்று.

10. பிரஹ்மஸ்ரீ சேலம் புரோஹிதம் குப்பையரவர்கள் நம்மவர்கள் தக்கத்தக்க சத்திரங்கள் தகுந்த இடங்களில் கட்டவேண்டுமென்றும், ஆஸ்பத்திரியொன்று நம்மவர்களுக்காக அவசியம் பிரத்தியேகமாயிருக்கவேண்டுமென்றும், நதி தீரங்களில் நம்மவர்களுக் கென்றே ஓர் படித்துறை தனித்திருக்க வேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ கே. எஸ். பி. நன்னுசாமி பாகவதரவர்கள் அறஞ்செய்ய வேண்டுமென்கின்ற அபிப்பிராயந் தங்கிய பல சுலோகங்களைச் சுட்டிக் காட்டித் தருமம் புரியவேண்டியது மிகவுமாவசியகம். இராமேஸ்வரம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களில் சத்திரங்களில்லாமல் நம்மவர்கள்படுங் கஷ்டம் நவில முடியாதென்றும், நதி தீரங்களில் படித்துறை கட்டினால் தான் நம்மவர்களுக்கு நாகரீகம் அதிகரிக்கு மென்றும், அவ்வித தருமங்களைப் புரியக் காலம் ஏற்படவில்லை யென்றும், ஆகையால் தருமம் நினைத்தவுடனே நிறைவேற்ற வேண்டுமென்றும், கிரகம் பற்றியெரியும்போது அணைக்கக் கிணறு வெட்டுவதாயிருந்தால் எப்படியாகும்? உதாரணமாக, ஒருகாலத்தில் பொறுமை மிகுந்த தருமரிடம் ஒரேழைப்பிராமணன் கலியாணவிஷயமாய்த் தருமத்தைக் கருதி வர, தருமரானவர் நாளைக்காகட்டு மென்றுரைக்க, அப்பொழுது அந்தணன் விசனமுற்று நிற்க, வாயுபுத்திரனாகிய பீமன் இதைக் கண்டு ஜெயகண்டாமணியைப் பலதரமுமடிக்க, தருமன் நீ யெந்த தேசத்தை ஜெயித்து வந்தாயப்பா வென்று வீமனை வினவ, அதற்கவன் தாங்கள் இயமனை ஜெயித்ததினால் எல்லா ராஜ்ஜியங்களையும் ஜெயித்தவர்களாயிருக்கிறோமென்று சொல்ல, தருமர் திடுக்குற்றுத் திகைத்து நாம் அவ்வந்தணனுக்குச் செப்பியது தவறென்று கருதி, உடனே அவ்வேதியனுக்குப் போதுமான பொருளளித்துப் போகும்படி செய்தனரென்பது கர்ணபரம்பரையான புராணகதை. ஆகையால் அறத்தைக்கருதிய அன்றே புரிய வேண்டிய தவசியமென்று ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் நம்மவர்கள் வசிக்கும் இடங்களிலுள்ள நதி தீரங்களில் நம்மவர்கள் மாத்திரம் சௌகரியமாய் ஸ்நானஞ்செய்யும் பொருட்டுப் படித்துறை முதலியவைகள் கட்டவேண்டிய தவசியமெனவும், சத்திரம் இதர ஜாதியாருக்கெல்லாந் தனித்தனியே இருக்கின்றது; நம்மவர்களுக்கு மாத்திரமில்லை; ஆகையால் பிரத்தியேகமாய்ச் சத்திரங்கள் தகுந்த இடங்களில் அதிசீக்கிரமாய் ஏற்படுத்தவேண்டுமெனவும், சபையோருக்குத் தெரிவித்ததின் பேரில் அனைவராலும் கரகோஷத்துடன் தீர்மானிக்கப் பட்டது.

11. பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசுவாமி ஐயரவர்கள் சீமை முறையாய் இயந்திரங்களைக்கொண்டு நம்மவர்கள் கைத்தொழிலைச் செய்யவேண்டுமென்று விரும்பி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ அல்லு. சீதாராமய்யரவர்கள் சிறுதுளி பெருவெள்ளம் போல நம்மவர்களெல்லாருஞ் சேர்ந்து பெருத்த தொகை சேர்த்து இயந்திர சாலைகளேற்படுத்தி ஏழைகளைக் கொண்டு கைத்தொழில் தகுந்த விதமாய்ச் செய்வித்தால், நாமு மவர்களுக்குந் தக்க உதவியாகுவதல்லாமல் அதிக ஆதாய மடையலாமென்றும், தவிர இது விஷயமாய்க் கவர்ன்மென்டாரவர்களிடமும் வேண்டிய உதவிபெறலாமென்றும் ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ அனந்து. இராமசாமி பாகவதரவர்கள் எல்லோரும் ஒற்றுமையாயிருக்கவேண்டுமென்றும், ஒரு தினுசு பலபேர் சேர்ந்து ஒரேயிடத்தில் ஏற்படுத்த வேண்டுமென்றும், பலபேர்கள் தனித்தனியே செய்வதால் சரக்குகளின் விலை குறைந்து வர்த்தகம் கெட்டுப் போகிறதென்றும், ஐரோப்பாவில் பலபேர்கள் ஒருங்கு கூடி நடத்துவதால் அவர்களுள் வெகுவாய் ஏழைகளாகிறதில்லையென்றும், அவ்விதமாய் நாமும் செய்யவேண்டுமென்றும் ஆதரித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் இவ்விஷயந் தகுந்ததெனச் சபையோருக்குரைத்ததின் பின் இதுவே மிக சிலாக்கியமென்று ஒப்புக்கொண்டு முடிவு செய்யப்பட்டது.

12. நம்மூர் சாய ஜவுளிகள் இதற்குமுன் கெட்டியான சாயங்களில் போடப்பட்டு சரியான விலைக்கு விற்கப்பட்டு வந்தன. இப்பொழுது அவ்

விதஞ் செய்யாததினால் வியாபாரம் க்ஷீணித்துப் போயிருக்கிறது. ஆகையால் இனிமேலாவது நாம் எல்லோரும் மாட்சிமை தங்கிய சென்னை கவர்னர் அவர்களுரைத்த வண்ணம் கெட்டிச்சாயத்தையே உபயோகிக்க முயல வேண்டும் என்று பிரஹ்மஸ்ரீ மாணிக்கா. சங்கரநாராயணய்யரவர்கள் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ எ. குப்புசாமி ஐயரவர்கள் நம்மவர்கள் (அனிலைன்) பவுடர் சாயம் போடுவதால் தங்கள் நாணயமான ஜவுளிகளைக் கெடுத்துப்போடுகிறார்களென்றும், ஆகையால் பவுடர் சாயம் ஒரு போதும் சிறிதும் உபயோகிக்கக்கூடாதென்றும், கிளாஸ்கோ முதலிய இடங்களில் போட்டு வருகிற கெட்டிச்சாயம் போல் நாமும் அப்படியே போடவேண்டுமென்றும், அவ்வித கெட்டிச்சாயம் போடுவதில் சிறிது நாளதிகப்படுமேயன்றி செலவு சரியாயிருக்கிறதென்றும், கம்பெனிகள் ஏற்படுத்த வேண்டுமென்றும், ஐரோப்பியர்கள் காலம் வியர்த்தமாகாமல் எப்பொழுதும் சுறுசுறுப்புடையவர்களாயிருக்கிறார்களென்றும், வர்த்தக அடையாளங்கள் அதாவது டிரேட் மார்க் (Trade Mark) முதலியவைகள் அவசியமாய் வேண்டுமென்றும் அதிக விருப்பத்துடன் ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள், பிரஹ்மஸ்ரீ மாணிக்கா. சங்கரநாராயணய்யரவர்களும், பிரஹ்மஸ்ரீ எ. குப்புசாமி ஐயரவர்களும் சொல்லிய விஷயம் மிகவும் நலமென்றும், ஏனென்றால், பெரிய பட்டணங்களிலுள்ளவர்கள் சரியான கெட்டிச்சாயம்போட ஆரம்பித்தால், சிறிய கிராமங்களிலுள்ளவர்களும் அவ்வாறே போட ஆரம்பிப்பார்களென்றும் சபையோருக்குச் சொல்லியதின் மேல், சபையோர்களால் அது மிகப் பிரீதியுடன் ஒப்புக்கொள்ளப்பட்டு முடிவு செய்யலாயிற்று.

13. மதுரை ஸௌராஷ்டிர சபை கௌரவ காரியதரிசியவர்கள் "முதல் கான்பரன்ஸ் (conference) கும்பகோணத்திற்கூடியது. நாம் தென்னிந்தியாவில் 34 பிரதான பட்டணங்களில் வசிக்கிறோம். அநேகருக்கு நோட்டீஸ் முதலியவைகள் அனுப்பப்பட்டன. அநேகரிடமிருந்து பதில் கடிதங்களும் வந்திருக்கின்றன. இவ்விடம் வந்திருப்பதில் சேலத்திலிருந்துதான் சில முக்கியஸ்தர்கள் வந்திருப்பதாய்த் தெரியவருகிறது. எல்லாவிஷயங்களும் விரைவில் அனுஷ்டானத்திற்கு வரவேண்டியதவசியமாயிருந்த

போதிலும் நாளடைவில் யாவற்றும் கைகூடுமென்பதற்கையமில்லை. ஆகையால் அடுத்த வருஷம் இந்த மஹாநாடானது சேலத்தில் கூட வேண்டு" மென்று பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ சேலம் முராரி. இராமசாமி ஐயரவர்கள் அடுத்த மஹாநாடு சேலத்தில் கூடுவதாயிருந்தால் விகாரிஹூ வைகாசிமீ த்தில் கூடவேண்டு மென்று ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்கள் அடுத்தஹூ இம்மஹாநாடு சேலத்தில் கூடுவதே அனுகூலமெனச் சபையோருக் கறிவித்ததின் பின் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரித்துந் திர்மானிக்கப்பட்டது.

14. பிரஹ்மஸ்ரீ சேலம் முராரி. முராரி ஐயரவர்கள் ஸௌராஷ்ட்ரர்கள் வசிக்கும் பல இடங்களிலும் நடக்கும் விவாஹம் முதலிய சுபகாரிய காலங்களில் கால் ரூபாய் வீதத்திற்குக் குறையாமல் பொதுஜன நன்மைக்கென்றே வசூலித்து ஓர் பண்டேற்படுத்த வேண்டுமென்று பிரேரேபித்தனர்.

மதுரை ஸௌராஷ்ட்ர சபை கௌரவ காரியதரிசி பிரஹ்மஸ்ரீ வி. எஸ். இராமய்யரவர்கள் அதை ஆமோதித்தனர்.

அக்கிராசனாதிபதியவர்களும் அவ்விதஞ்செய்வதே தகுதியெனச் சபையோருக்குச் சாற்றிக் கரகோஷத்துடன் ஆதரித்ததின் பேரில் தீர்மானிக்கலாயிற்று.

பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமி ஐயரவர்கள் எல்லாக்காரியங்களும் நடத்த ஐவேசு அதிகம் வேண்டியிருக்கின்றது. நம் ஸௌராஷ்ட்ர லிபியை முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்றால் இப்பொழுது ரூ. 500 தேவையாயிருக்கிறது அது சேர்ந்தால் தான் ஸௌராஷ்ட்ர லிபி முன்னுக்கு வரும். ஆகையால் அதை அளிக்கத்தக்க பிரபுக்களும் இங்ஙனம் விஜயமாயிருக்கிறார்களென்று இயம்பினர். அவ்வாறுரைக்கவே பெங்களூர் ஹிந்து சமய உபந்நியாசகரான பிரஹ்மஸ்ரீ கொ. முத்து விஜயரங்க முதலியாரவர்கள் இந்த கான்பரன்ஸ் கூடுகிற விஷயம் பத்திரிகைகளின் மூலமாய் அறிந்துகொண்டவர்களாகி வெகு சிரத்தையோடு மேற்படி சபைக்கு வந்திருந்து பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமி ஐயரவர்கள் இப்பொழுது உபந்நியாசித்

திருக்கும் விஷயமானது அவசியம் முற்றுப்பெற வேண்டியதாகையால் இவ் விஷயார்த்தமாக ஒவ்வொரு கனவான்களும் தகுந்த உதவிபுரிய வேண்டு மென்று மனமில்லாதவர்களுக்கும் மனதை யுண்டுபண்ணத் தக்கனவாகிய மாதுர்யமும் சாதுர்யமும் அமைந்த பதங்களுடன் சுமார் அரைமணி நேரம் வரைப் பிரசங்கித்ததின்பேரில், 16, 17, பக்கங்களிற்கண்ட 35 பிரபுக்கள் ரூ. 415 வரை கொடுப்பதாய்க் கையொப்பமிட்டும், மேற்படி முதலியா ரவர்கள் செய்த பிரசங்க ரஞ்சிதத்தைப்பற்றி வெகுவாய் களிப்புற்று "பிரசங் கக் களஞ்சிய"மெனப் பெயருமிட்டனர்.

பிரஹ்மஸ்ரீ அல்லு. சீதாராமய்யரவர்கள், ஐவேசிருந்தால்தான் எக்காரி யக்களுஞ் சீக்கிரம் நடக்குமென்றும், ஆனால் பெண்பிள்ளைகளுக்கு கல்வி கற்பிப்பதற்கு அதிக பணம் செலவழியாமல் எளிதாகவே நடத்தி வரலா மென்றும், ஆகையால் அதிசீக்கிரம் பாலிகா பாடசாலையையும் ஸ்தாபிக்க வேண்டுமென்றும் விளம்பினர்.

15. பிரஹ்மஸ்ரீ ஜெ. கிருஷ்ணய்யரவர்கள் இதர வகுப்பார் சபை சேர்ந்து முன்னுக்கு வந்திருக்கிறார்கள். நாமும் அவ்விதமே வந்துகொண் டிருக்கிறோம். இந்த மஹாநாடு கூடிய விஷயத்திற்காக நம்மை ஆண்டு வருங் காருண்ணிய சக்கரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியம்மா ளவர்களுக்கும், மாட்சிமை தங்கிய சென்னை கவர்னர் துரையவர்களுக்கும், நீடூழிவுலகத்து நீடூழிவாழ்க வென மனப் பூர்வமாய் வந்தனமளிக்கவேண்டு மென்று சபையோரைக் கேட்டுக் கொண்டதின்பேரில் களிப்புடன் ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்தவர்களாய் அனைவரும் கரகோஷத்துடனும், விசுவாசத்துடனும் மனப்பூர்வமாய் வந்தனம் அளித்தார்கள்.

பிரஹ்மஸ்ரீ மதுரை ஸௌராஷ்ட்ரசபை கௌரவ காரியதரிசி வி. எஸ். இராமைய்யரவர்கள், இம்மூன்று நாட்களிலும் அக்கிராசனாதிபதியாக வீற் றிருந்து சகல நடவடிக்கைகளையும் வெகு திருப்திகரமாய் நிறைவேற்றின பிரஹ்மஸ்ரீ சேலம் பு. நா. அழகரய்யரவர்களுக்கும் இச்சபை கூடுவதற்கு அன்போடிடமளித்த இப்பாடசாலை மானேஜர் பிரஹ்மஸ்ரீ மாணிக்கா. சங்கர நாராயணய்யரவர்களுக்கும், மற்றும், மூன்று நாட்களிலும் முறையே சபை யிற் பிரசங்கித்த கனவான்களுக்கும், மற்றுமுள்ள தனவான்களுக்கும் ஏனை யோர்களுக்கும் விநயமாக வந்தனம் அளிக்கக் கேட்டுக்கொண்ட வண்ணம் மிகப் பிரீதியுடன் வந்தனமளித்து அக்கிராசனாதிபதியவர்களுடைய உத்தி ரவின்படி சபை கலைந்தது.

## ஸௌராஷ்ட்ர லிபி அபிவிருத்தி விஷயமாக சந்தா கொடுப்பதாய் கையொப்பமிட்டவர்களின் பேயர் அட்டவணை.

| | | | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| 1. | பிரஹ்மஸ்ரீ | * சேலம் முராரி. இராமசாமி ஐயர் | 25—0—0 |
| 2. | ,, | * வி. எஸ். கிருஷ்ணசாமி ஐயர் | 25—0—0 |
| 3. | ,, | * மாணிக்கா. சங்கரநாராயண ஐயர் | 25—0—0 |
| 4. | ,, | * கே. எஸ். பி. நன்னுசாமி பாகவதர் | 50—0—0 |
| 5. | ,, | * கந்தாடை. இலட்சுமண பாகவதர் | 25—0—0 |
| 6. | ,, | அல்லு. சீதாராமய்யர் | 25—0—0 |
| 7. | ,, | * சி. முனிகுப்பய்யர் | 25—0—0 |
| 8. | ,, | * உபந்நியாச சபையோருபயம் | 25—0—0 |
| 9. | ,, | பாதே. முனிகுப்பையர் | 10—0—0 |
| 10. | ,, | லோகந்தா. நா. இராமசாமி ஐயர் | 15—0—0 |
| 11. | ,, | * தொப்பே. சீ. முனிநாகேந்திரய்யர் | 10—0—0 |
| 12. | ,, | ஆர். வி. இரங்கய்யர் | 10—0—0 |
| 13. | ,, | * நாட்டாண்மை. குப்பையர், இராமலிங்கய்யர். | 10—0—0 |
| 14. | ,, | வி. எஸ். கஸ்தூரிரங்கய்யர் | 10—0—0 |
| 15. | ,, | டி. வி. பாலுசாமி ஐயர் | 10—0—0 |
| 16. | ,, | * இராமச்சந்திரியா. முத்துராம பாகவதர் | 5—0—0 |
| 17. | ,, | கே. யன். இலட்சுமணய்யர் | 10—0—0 |
| 18. | ,, | * பூருளி. சுந்தராஜ பாகவதர் | 5—0—0 |
| 19. | ,, | நீலமேகம். ப. வெங்கடாஜலமய்யர் | 5—0—0 |
| 20. | ,, | * கந்தாடை. சு. இரங்காச்சார்லு | 5—0—0 |
| 21. | ,, | * அல்லு. கிருஷ்ணய்யர் | 10—0—0 |
| 22. | ,, | * கொ. மா. இரங்கசாமி பாகவதர் | 6—0—0 |
| 23. | ,, | குடுவா. முனிகிருஷ்ணய்யர் | 2—0—0 |
| 24. | ,, | தேவேந்திரியா. பெல்லய்ய ஜோஷியர் | 2—0—0 |
| 25. | ,, | குட்டி. நா. வெங்கிடகிருஷ்ணய்யர் | 2—0—0 |
| 26. | ,, | ஆர். எச். வெங்கிடாஜலம் ஐயங்கார் | 2—0—0 |
| 27. | ,, | * பரசுராம. தி. நாராயணசாமி ஐயர் | 2—0—0 |

| | | | ரூ. அ. பை. |
|---|---|---|---|
| 28. | பிரஹ்மஸ்ரீ | அய்யல்லூ. சுப்பய்யர் | 2—0—0 |
| 29. | ,, | தொப்பே. ஙீ. குப்புசாமி ஐயர் | 5—0—0 |
| 30. | ,, | குப்பா. வைத்தியம் நரசிம்மய்யர் | 5—0—0 |
| 31. | ,, | தேவேந்திரியா. அழகராசாமி ஐயர் | 1—0—0 |
| 32. | ,, | பரமக்குடி சொ. நா. ம. முத்துசாமி ஐயர் | 5—0—0 |
| 33. | ,, | * சென்னை நா. ம. சுந்தராமய்யர் | 25—0—0 |
| 34. | ,, | கும்பகோணம் ஜி. வெ. பத்துருசாமிஐயர் | 10—0—0 |
| 35. | ,, | * கே. வி. ராமாச்சாரியார், பி. ஏ. | 6—0—0 |
| | | ஆக மொத்தம் ரூ. | 415—0—0 |

* இவ்வடையாளமிட்டவர்களின் தொகை வரவு வந்து **விட்டது.**

1898ளு
எப்பிரல்மீ 4வ

**பு. நா. அழகரப்யர்,**
அக்கிராசனாதிபதி,
ஸௌராஷ்ட்ர பிராஹ்மண இரண்டாவது மஹாநாடு.

ॐ

ஸ்ரீராமஜெயம்.

# सौराष्ट्र ब्राह्मण त्रितीय सम्मेळनो । सेलम् ।

# The Third Sourashtra Brahmana Conference, Salem.

## ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மூன்றாவது மஹாநாடு, சேலம்.

---

விகாரிஸு வைகாசிமீ 19, 20, 21, 22உக்கு 1899ஸு மேமீ 31உ, ஜூன்மீ 1, 2, 3உகளில் சேலத்தில் நடந்த மூன்றாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

அக்கிராசனர்.

உறையூர்

பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி. கஸ்தூரி ரெங்கய்யர் அவர்கள்.

காரியதரிசி.

சேலம்

பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள்.

இம்மஹாநாடு சேலம் ஸௌராஷ்ட்ர
சபையாரின் நன்முயற்சியால்
நடைபெற்றது.



பிரஹ்மஸ்ரீ

அறந்தாங்கி. கஸ்தூரி ரேங்கய்யர் அவர்கள்,

உறையூர்.

உ

# ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மூன்றாவது மஹாநாட்டின் நடவடிக்கைகள்.

---

சேலம் ஸ்ரீ பிரசன்ன வரதராஜப்பெருமாள் கோவிலுக்கு எதிரில் போடப்பட்டிருக்கிற அலங்காரமான பெரிய கொட்டகையில் 1899௵ மே௴ 31௳ மாலை 3½ மணிக்கு மூன்றாவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாடு கூடியது. தினந்தோறும் சுமார் 1000 பிரதிநிதிகளுக்கு மேல் வந்திருந்தார்கள்.

## அக்கிராசனாதிபதியவர்கள் நியமனம்.

சேலம் ஸௌராஷ்ட்ர சபையின் கௌரவ காரியதரிசி அவர்களாகிய பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள் மஹாஜன சபையோருக்கு அன்புடன் வந்தனமளித்து, மூன்றாவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாட்டிற்கு திருச்சினாப்பள்ளிஜில்லா உறையூர்பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி.கஸ்தூரிரெங்கய்யர்அவர்கள் அக்கிராசனாதிபதியாய்வீற்றிருக்கவேண்டுமென்று பிரேரேபிக்க, மதுரை பிரஹ்மஸ்ரீ கௌடு. இராமலிங்கய்யர் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு, மதுரை பிரஹ்மஸ்ரீ V. S. கிருஷ்ணசாமய்யர் அவர்களால் ஆதரிக்கப்பட்டு, சபையோரால் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

## சப்ஜெக்ட் கமிட்டி மெம்பர்கள் நியமனம்.

மூன்றாவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாட்டின் பிரதிநிதிகளில் அடியிற்கண்ட 42 கனவான்கள் சப்ஜெக்ட் கமிட்டி மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### மதுரை.

பிரஹ்மஸ்ரீ கௌடு. இராமலிங்கயயர் அவர்கள்
,, புளியடி. முனிநாகேந்திர பாகவதர் அவர்கள்

பிரஹ்மஸ்ரீ திருச்கொண்டா. செல்வரெங்க ஜோசியர் அவர்கள்
,, வடகரை சுந்தராச்சாரியார் அவர்கள்
,, வி. எஸ். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள்
,, முசுவாதி. குமாருசாமி ஐயர் அவர்கள்
,, கே. எஸ். பி. நன்னுசாமி பாகவதர் அவர்கள்
,, நீலமேகம். ப. வெங்கடாசலமய்யர் அவர்கள்
,, தூமாட்டி. இரங்கசாமி ஐயர் அவர்கள்
,, தோராளி. இரங்கசாமி ஐயர் அவர்கள்
,, தாடா. இரங்கசாமி ஐயர் அவர்கள்
,, பொருனுவா. நாராயணசாமி ஐயர் அவர்கள்
,, என். கே. இராமலிங்கய்யர் அவர்கள்
,, தொ. சி. மு. சேதைய்யர் அவர்கள்
,, ஜெ. கிருஷ்ணய்யர் அவர்கள்
,, என். சுந்தர ராவ் அவர்கள்
,, எல். கே. துளசிராமய்யங்கார் அவர்கள்

## சென்னை.

பிரஹ்மஸ்ரீ என். எம் சுந்தரராமய்யர் அவர்கள்

## திருச்சினாப்பள்ளி.

பிரஹ்மஸ்ரீ கொப்பு. இராமசுவாமி ஐயர் அவர்கள்
,, அய்யங்கார். பெருமாளய்யர் அவர்கள்
,, பாதே. வெங்கடாசலபதி ஐயர் அவர்கள்
,, வி. என். இராமசுவாமி ஐயர் அவர்கள்

## உறையூர்.

பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி கஸ்தூரிரெங்கய்யர் அவர்கள்
,, மூப்பல்லு. கிருஷ்ணய்யர் அவர்கள்

## வாலாஜாபேட்டை.

பிரஹ்மஸ்ரீ கு. இரங்கதாம பாகவதர் அவர்கள்

## பெங்களூர்.

பிரஹ்மஸ்ரீ முத்தா. சுப்பய்யர் அவர்கள்

## பழனி.

பிரஹ்மஸ்ரீ செம்பு. இராமசுவாமி ஐயர் அவர்கள்

## சேலம்.

பிரஹ்மஸ்ரீ முராரி. முராரய்யர் அவர்கள்
,, முராரி. இராமசுவாமி ஐயர் அவர்கள்
,, முராரி. ரெங்கய்யர் அவர்கள்
,, புட்டா. அழகரய்யர் அவர்கள்
,, புரோகிதம். குப்பய்யர் அவர்கள்
,, எம். என். இராமசாமய்யர் அவர்கள்
,, பென்னுடம். வெங்கட்ராமய்யர் அவர்கள்
,, பரமக்குடி இராசுலய்யர் அவர்கள்
,, லகுடுவா. வெங்கடாசலபதி ஐயர் அவர்கள்
,, பாரகிரி. கி. நரசிம்மய்யர் அவர்கள்
,, நன்னியா. சொக்கய்யர் அவர்கள்
,, புட்டா. இராமச்சந்திரய்யர் அவர்கள்

## ராசிபுரம்.

பிரஹ்மஸ்ரீ அனந்து. செல்வய்யர் அவர்கள்

## செவ்வாய்ப்பேட்டை.

பிரஹ்மஸ்ரீ அச்சி. கோபால்சாமய்யர் அவர்கள்
,, அன்னு. திருமலய்யர் அவர்கள்

### மஹாநாட்டில் அனுசரிக்கவேண்டிய நூல்கள்.

மஹாநாட்டில் பேசவேண்டியவர்கள் பத்து நிமிஷம்வரை பேசலாமென்றும், அதற்கு மேல் பேசவேண்டியவர்களும் சப்ஜெக்ட் கமிட்டியிலில்லாதவர்களும் அக்கிராசனுதிபதி அவர்களுடைய அனுமதி பெற்றுத்தான் பேசவேண்டுமென்றும், ஸைலென்ஸ் பெல் அடித்தால் எவ்வித சப்தமும் அடங்கிவிடவேண்டுமென்றும் சேலம் பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர்

அவர்களால் தெரிவிக்கப்பட்டு, சபையோர் எல்லோராலும் அங்கீகரிக்கப் பட்டது.

1899ஞு ஜூன்மீ 1-உயாகிய மறுநாள் காலே 9-மணிக்கு பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்கள் வீட்டில் மஹாநாட்டில் பேசவேண்டிய விஷயங்களைத் தீர்மானிக்கும் பொருட்டு சப்ஜெக்ட் கமிட்டி மெம்பர்கள் கூடவேண்டுமென்று அக்கிராசனதிபதியவர்களால் தெரிவிக்கப்பட்டது.

## இரண்டாம் நாள் நடவடிக்கைகள்.

## 1—6—99.

### மஹாநாட்டினற்கு வந்தனோபசாரம்.

சேலம் ஸௌராஷ்ட்ர சபையின் கௌரவ காரியதரிசி அவர்களாகிய பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள் மஹாநாட்டினற்கு வந்தனோபசாரம் செய்து, இம்மஹாநாடானது முதலாவது கும்பகோணத்திலும், இரண்டாவது மதுரையிலும் கூடி மூன்றுவதாக சேலத்தில் கூடியிருப்பதாயும், இப்பேர்ப்பட்ட மஹாநாடுகளால் வித்தியாபிவிருத்தி, வர்த்தகவிருத்தி, நாகரீகம், பொதுஜன க்ஷேமம், பரஸ்பர அபிமானம், நடையுடைபாவனை சீர்திருத்தம், ஆசாரவிருத்தி முதலியவைகள் உண்டாகின்றதென்றும், பல இடங்களினின்றும் மஹாநாட்டிற்குவிஜயம் செய்திருக்கிற பிரதிநிதிகளுக்குத் தாம் மனப்பூர்வமாக வந்தனம் செய்து கொள்வதாயும் தெரிவித்துக்கொண்டார்.

### முதலாவது தீர்மானம்.

### வேதோக்த கர்மானுஷ்டானங்கள்.

"தென்னிந்தியாவில் வாசஞ் செய்கின்ற ஸௌராஷ்ட்ர பிராஹ்மணர்கள் வேதோக்த கர்மானுஷ்டானங்களை விதிப்படி வழுவாது நடத்தி வர வேண்டுமென்பது".

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள், சேலம்:—

சுமார் ஆயிரத்து முன்னூறு வருஷங்களுக்கு முன் நம் முன்னோர்கள் ஸௌராஷ்ட்ர தேசத்தில் வாசஞ்செய்தார்களென்றும், மகம்மதியர்கள் இந்தியாவின் மீது படையெடுத்த போது ஸௌராஷ்ட்ர தேசத்தை விட்டு

தெற்கே விஜயநகர ராஜ்ஜியத்திற்கு வந்து அங்கிருந்து சென்னை ராஜதானியிலுள்ள பட்டணங்களில் குடியேறி இருக்கின்றார்களென்றும், பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களென்ற சதுர் வருணஸ்தர்களில் பிராஹ்மணர்களுக்கு மட்டும் யஜன, யாஜனாதி அறுவித கர்மங்கள் உண்டென்றும், நம்மவர்களில் வேதோக்த கர்மானுஷ்டானங்களில் கொஞ்சம் தவறிப்போயிருப்பவர்கள் அவ்வாறு தவறாமல் வேதோக்த கர்மானுஷ்டானங்களை முற்றிலும் அனுஷ்டிக்கவேண்டுமென்றும், சோடச கர்மங்களை வழுவ விட்டவர்களுக்கு சூத்திரத்துவம் உண்டாகுமாதலால வேதோக்த கர்மானுஷ்டானங்களை கொஞ்சமும் தவறாமல் அனுஷ்டிக்க வேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதர் அவர்கள், மதுரை:—

வேதோக்த கர்மானுஷ்டானங்களின் சிறப்பையும், மகிமையையும் முக்கியத்தையும் பற்றி விஸ்தாரமாய்ச் சொல்லி வேதோக்த கர்மானுஷ்டானங்களைத் தவறவிட்டவர்களுக்கு பிரம்மதேஜஸு உண்டாகாதென்றும், சந்தியாவந்தனாதி கர்மானுஷ்டானங்களை கொஞ்சமும் தவறாமல் அனுஷ்டிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

பிரஹ்மஸ்ரீ முராரி. முராரி அய்யர் அவர்கள், சேலம்:—

வேதோக்த கர்மானுஷ்டானங்களை அனுஷ்டிப்பதால் பாபநிவாரணமாகுமென்று சொல்லி ஆதரித்தனர்.

மஹாஜன சபையோர் எல்லோராலும் வேதோக்த கர்மானுஷ்டானங்களை முறைப்படி வழுவாது நடத்தவேண்டுமென்று அங்கீகரிக்கப்பட்டது.

## இரண்டாவது தீர்மானம்.

### சமஸ்கிருத, ஸௌராஷ்ட்ர பாஷாபிவிருத்தி.

"சமஸ்கிருத, ஸௌராஷ்ட்ர பாஷைகள் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகளாயிருப்பதால், அவ்விருபாஷைகளையும் அவசியமாய்க் கற்பிப்பதுடன் ஸௌராஷ்ட்ர பாஷா கிரந்தங்களையும், வியாகரணங்களையும் பிரசுரிக்க வேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதர் அவர்கள், மதுரை:—

வயிரம், வயிடூரியம் முதலிய நவரத்தினங்களை தங்கத்தொட்டியில் வைத்துப்பதித்தால் எப்படிப் பிரகாசிக்குமோ அவ்விதமாக மஹாஜன சபை பிரகாசிக்கிறதென்றும், சகல விஷயங்களுக்கும் வித்தையேபூஷணமாயிருக்கின்றதென்றும், வித்தையினுல் கௌரவமும், செல்வமும், தர்மமும் விருத்தியாகிறதென்றும், சுயபாஷையாகிய ஸௌராஷ்ட்ரமும் சகலபாஷைகளுக்கும் தாய்ப்பாஷையாகிய சமஸ்கிருதமும் நமக்கு முக்கிய பாஷைகளாகையால் அவைகளை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்றும், சமஸ்கிருதமானது சகல பாஷைகளுக்கும் மூல பாஷையாகவும், இலக்கிய, இலக்கணங்களும், அருமையான லௌகீக, வைதீக கிரந்தங்கள் நிறைந்த அரிய பாஷையாகவும், சுத்தமும் ஸ்பஷ்டமுமான ஆரிய பாஷையாகவுமிருப்பதால் இக பர விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அப்பாஷைகளை அவசியமாய்க் கற்கவேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ முராரி. முராரி ஐயர் அவர்கள், சேலம்:—

ஸௌராஷ்ட்ர பாஷையானது சமஸ்கிருத பாஷையினின்றும் பிறந்த பிராகிருத பாஷைகளில் ஒன்ருயிருப்பதாலும், அவ்விரண்டு பாஷைகளும் ஒன்ருேடொன்று சம்பந்தப்பட்டிருப்பதாலும், ஸௌராஷ்ட்ர பாஷையில் இலக்கியங்களையும், வியாகரணங்களையும் சமீபத்தில் அச்சிடவேண்டுமென்றும் சொல்லி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள், சேலம்:—

நம் முன்னோர்கள் ஆதியில் ஸௌராஷ்ட்ர பாஷையில் அதிகத்தேர்ச்சியடைந்திருந்தார்களென்றும், வந்த இடங்களில் ஆங்காங்கிருந்த வகுப்பினருடன் கூடி வியாபாரங்கள் செய்து வந்தமையால் சிலர் ஷெ விஷயங்களை மறந்துபோனவர்களாகத் தெரியவருகிறதாகவும், நம்மவர்களில் சிலர் ஸௌராஷ்ட்ர பாஷையின் லக்ஷணத்தை பூர்ணமாய்த்தெரிந்து கொள்ளாமலிருக்கிருர்களென்றும், 35 வருடத்திற்குமுன் கிடைத்திருக்கிறவியாகரணத்தை அச்சிட்டு வெளியிடவேண்டுமென்றும், அப்படிச் செய்யாவிட்டால் நாம் தாய் தந்தையர்களை மறந்தவர்கள் போலாவோமென்றும், என்ன பிரயாசை யெடுத்தாவது நம்முடைய ஸௌராஷ்ட்ர லிபியை முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்றும், காலஞ்சென்ற வித்வான் பிரஹ்மஸ்ரீ வெங்கடசூரி ஐயங்கார் அவர்களும், ஜீவந்தராயிருக்கிற மதுரை பிரஹ்மஸ்ரீ

கந்தாடை. இலக்ஷ்மண பாகவதர் அவர்களும், பிரஹ்மஸ்ரீ வடகரை சுந்தராச்சாரியார், பாமக்குடி பிரஹ்மஸ்ரீ தஸ்மா. சுப்பய்யரவர்களும் ஸௌராஷ்ட்ர பாஷையில் சொல்நயம், பொருள்நயம் அமைந்த சிறந்த காவியங்கள் செய்திருக்கிறார்களென்றும், ஸௌராஷ்ட்ர வியாகரணச் சிறப்பை சில உதாரணங்களைக்கொண்டு தெரிவித்தும், மதுரையில் கூடிய இரண்டாவது மஹாநாட்டில் ஸௌராஷ்ட்ர லிபியை முன்னுக்குக் கொண்டுவரும் பொருட்டு 500 ரூபாய் வேண்டுமென்று தீர்மானித்ததில் அதில் சிலதொகை வசூலாயிருப்பதினாலே ஸௌராஷ்ட்ர லிபியை அதிசீக்கிரத்தில் விருத்திக்குக் கொண்டுவரவேண்டுமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்கள், மதுரை.

தண்டி, பவபூதி முதலிய கவிகள் செய்திருக்கிற நாடகங்களில் ஸௌரஸேனி பாஷை பிரயோகிக்கப்பட்டிருக்கிறதென்றும், சேலம் பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள் செய்திருக்கிற ஸௌராஷ்ட்ர வியாகரணத்தில் நாமவாசகம், கிரியாவாசகம் முதலிய சில பாகங்களைப் பார்வையிட்டதில் மிகவும் சிலாகிக்க வேண்டியதாய் இருக்கிறதென்றும், மாக்ஷிமை தங்கிய சென்னை கவர்னர் அவர்களாகிய ஸர் ஆர்தர் ஹாவ்லாக் அவர்கள் 1898ஞ அக்டோபர்மீ மதுரைக்கு வந்தபோது மதுரை ஸௌராஷ்ட்ர வகுப்பார் ஓர் வந்தனோபசாரப் பத்திரிகை வாசித்தார்களென்றும், அதில் பிரஸ்தாபித்திருந்த ஸௌராஷ்ட்ருடைய பூர்வசரித்திரவரலாற்றைப்பற்றிக் கேட்டு கனம் கவர்னரவர்கள் மிகவும் சந்தோஷித்ததாகவும், ஸௌராஷ்ட்ர லிபியை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்றும் தமிழ் பாஷையில் சொல்லி ஆதரித்தனர்.

மகாஜன சபையோர் எல்லோராலும் ஸௌராஷ்ட்ர லிபியை சீக்கிரத்தில் முன்னுக்குக் கொண்டுவரவேணுமாய்க் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

## மூன்றாவது தீர்மானம்.

### தர்ம சத்திரங்கள்.

"ஸௌராஷ்ட்ரர்களுக்கு உபயோகப்படும் பொருட்டு சென்னை, திருப்பதி, இராமேஸ்வரம் முதலிய யாத்திரை ஸ்தலங்களில் தர்ம சத்திரங்களைக் கட்ட வேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ N. M. சுந்தராராமய்யர் அவர்கள், சென்னை:—

நம்முடையவர்கள் அடிக்கடி திருப்பதி, காளாஸ்திரி, காஞ்சீ முதலிய யாத்திரை ஸ்தலங்களுக்குப் போகும் மார்க்கத்தில் சென்னையில் தங்கும்படி நேரிடுவதாலும், யாத்திரைக்காரர்களுக்கு வசதியான தரும சத்திரம் ஸௌராஷ்டிரர்களுக்கென்று இல்லாமையாலும், சென்னையில் ஓர் சத்திரம் கட்டவேண்டுமென்றும், அதற்காகப்பிடிக்கும் செலவில் விசேஷ பாகத்தைத் தாம் கொடுத்து உதவி செய்கிறதாகவும் சொல்லி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள், சேலம்:—

நம்முடையவர்கள் சென்னைக்குப்போனால் அங்கே தங்குவதற்கு சரியான இடமில்லையென்றும், ஆகையால் பிரதமத்தில் சென்னையில் சத்திரம் கட்டவேண்டியதவசியமென்றும், நம்மவர்கள் இராமேஸ்வரம் சென்றால் தங்குவதற்கேற்ற இடம் கிடைப்பது அருமையாயிருக்கிறதென்றும், இதரபிராஹ்மணர்களுடன் கலந்து நம்மவர்கள் சமயல் செய்வது வழக்கமாயில்லாதபடியால் குடும்ப சமேதராய் மரத்தின் நிழலுக்கோ அல்லது மறைவிடங்களுக்கோ போய் போஜனாதிகள் தயாரிக்க வேண்டியிருக்கிறதென்றும், அக்காலங்களில் மழை, காற்று முதலியவைகள் சம்பவித்தால் மிகத்துன்பமும், அவஸ்தையும், அசௌகரியமும் அடையவேண்டியிருக்கிறதென்றும், இராமேஸ்வரம், குற்றாலம், பாபவிநாசம் முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களிலும் அவைகளுக்குப் போகும் மார்க்கங்களிலும் சத்திரங்கள் கட்டவேண்டியதவசியமென்றும், பிரஹ்மஸ்ரீ N. M. சுந்தராராமய்யர் தம்முடைய முயற்சியாலும் அவர்கள் பொருளுதவியாலும் சென்னையில் ஓர் சத்திரம் சீக்கிரத்தில் ஏற்படுத்தி விசேஷமான கீர்த்தி அடையப்போகிறாரென்றும், பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்கள் ஈரோட்டுக்கடுத்த காவேரி ஸ்டேஷனில் ஓர் சத்திரம் கட்டுவதாய் நிச்சயித்திருக்கிறாரென்றும் தெரிவித்து ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ V. S. கிருஷ்ணசாமய்யர் அவர்கள், மதுரை:-

சென்னையில் சத்திரம் கட்டுகிற விஷயத்தில் பிரஹ்மஸ்ரீ N. M. சுந்தராராமய்யர் அவர்கள் சத்திரத்திற்குப் பிடிக்கும் தொகையில் பாதியை தம்முடைய சொந்தத்தில் கொடுப்பதுமன்னியில் அதற்குவேண்டிய முயற்சி

கள் செய்வதாகவும், அவரைப்போல் மற்ற கனதனவான்களும் முக்கிய மான ஸ்தலங்களில் சத்திரங்கள் ஸ்தாபிக்க வேண்டுமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

பிரஹ்மஸ்ரீ N. K. இராமலிங்கய்யர் அவர்கள், மதுரை:-

அனாதப்பிரேத ஸம்ஸ்காரம் செய்தல், பாழுங்கோயில்களைக்கட்டி ஜீர்ணோத்தாரணம் செய்தல் முதலிய தர்மங்களைச் செய்பவர்களுக்கு அஸ்வமேதயாக பலன் லபிக்கிறதென்று சொல்லப் பட்டிருப்பதால் பிரஹ்மஸ்ரீ N. M. சுந்தரராமய்யர் அவர்கள் ஏற்றுக்கொண்ட தர்மமானது மிகவும் சிலாகிக்கத்தக்கதென்று பகவத்கீதை முதலியவைகளிலிருந்து சுலோகங்களைச் சொல்லி சந்தோஷிப்பித்தனர்.

அக்கிராசனாதிபதி அவர்கள் சபையோரைநோக்கி தனவான்கள் இப்பேர்ப்பட்ட காரியங்களில் முன்னுக்கு வந்தாலன்றி ஏழைகளால் மேற்சொல்லிய தருமங்களை விருத்திக்குக் கொண்டுவந்து நிலைநிறுத்த முடியாதென்றும், ஒவ்வொரு பிரபுவும் புண்ணிய க்ஷேத்திரங்களில் சத்திரங்கள் கட்டுகிற விஷயத்தில் உதவிசெய்ய வேண்டியது அவசியமான விஷயமென்றும் சொல்லிய பின்னர் ஸௌராஷ்ட்ரர்களுக்காக யாத்திரை ஸ்தலங்களில் தர்ம சத்திரங்கள் கட்டவேண்டுமென்று சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

சங்கீத வித்தை.

பிரஹ்மஸ்ரீ இராமச்சந்திர பாகவதர் அவர்கள், வாலாஜாப்பேட்டை:-

சங்கீத சாஹித்தியமானது வித்தைகளில் சிறந்ததென்றும், காதுக்கினிமையானதென்றும், மனதிற்கு ஆனந்தகரமானதென்றும், அழுங்குழந்தைகளும் சங்கீதத்தில் ஆனந்திக்கிறதென்றும், பசுக்களும், பாம்புகளும் கானத்தைக் கேட்டுக் களிப்படைகிறதென்றும், சங்கீத கானமானது சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணபகவான், நந்திதேவர், ஆஞ்சநேயர், ஆதிசேஷர், சரஸ்வதிதேவி முதலியோர்களால் அதிப்பிரீதியுடன் அனுஷ்டிக்கப்பட்டதென்றும், பிராஹ்மணர்களுக்கு நித்ய கர்மானுஷ்டானங்கள் எப்படி ஏற்பட்டிருக்கிறதோ அப்படியே சங்கீத, சாஹித்ய, பரத, நடன, சாஸ்திரங்கள் ஏற்

பட்டிருக்கிறதென்றும், அவைகளையும் சற்று கற்றுணர்ந்து காலை மாலை களில் பகவத் பஜனையைத் தவறுமல் செய்யவேண்டுமென்றும் விசேஷ மாய் உபன்னியாசித்ததின்பேரில் சபையோர் எல்லோராலும் அங்கீகரிக்கப் பட்டது.

நான்காவது தீர்மானம்.

இங்கிலீஷ் பாஷாபிவிருத்தி.

"இங்கிலீஷ் பாஷையானது வர்த்தகம் முதலிய விஷயங்களுக்கு அவசியமாயிருப்பதால் அதை அபிவிருத்தி செய்யவேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ J. கிருஷ்ணய்யர் அவர்கள், மதுரை:-

நம்மவர்கள் அவசியமாய் இங்கிலீஷ் பாஷையைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும், தற்காலம் இங்கிலீஷ் பாஷாபிவிருத்தியானது நம்மவர் களுக்குள் மிகவும் குறைவாய் இருப்பதாயும், இங்கிலீஷ் கல்வி இல்லாதவர் களுக்கு வர்த்தகம், இராஜாங்கம் முதலிய விஷயங்களில் அநேக சௌகரி யங்கள் இல்லாமல் போய்விடுகிறதென்றும், இவ்வகுப்பினருக்கென்றே இங்கிலீஷ் பள்ளிக்கூடங்கள் இல்லாமலிருந்து சுமார் பன்னிரண்டு வரு ஷங்களுக்கு முன் மதுரையில் ஓர் ஸௌராஷ்ட்ர பிரைமரி பாடசாலை ஏற் பட்டதென்றும், அதினின்றும் அநேகர் வாசித்து முன்னுக்கு வருகிறார் களென்றும், இப்பொழுது மதுரையில் மூன்று பிரைமரி பாடசாலைகளும், ஓர் லோயர் ஸெகண்டரி பாடசாலையும் ஏற்பட்டிருக்கிறதென்றும், வர்த்த கத்திற்கு இங்கிலீஷ் பாஷையானது மிகவும் அவசியமானதென்றும், எங்கே பிரயாணம் செய்வதாயிருந்தாலும் அதுவே உதவியா யிருக்கிறதென்றும், இங்கிலீஷ் பாஷை தெரிந்திருந்தால் எல்லா விஷயங்களையும் நாம் இலகு வாய்த் தெரிந்து கொள்ளலாமென்றும், மதுரையில் ஸ்கூல்கள் வைக்கப் பட்டதுமுதல் சுமார் 2000 பேர்கள் வரையில் வாசித்து தெளிந்திருக்கிறார் களென்றும், ஸ்கூல்களை ஸ்தாபித்து இங்கிலீஷ் பாஷையை அபிவிருத்தி செய்யவேண்டியது மிகவும் அவசியமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ வி. என். இராமசுவாமி அய்யர் அவர்கள், திருச்சினுப்பள்ளி:-

தாம் திருச்சினுப்பள்ளியிலுள்ள ஸௌராஷ்ட்ர பிரபுக்களை வரவழை த்து பிள்ளைகளுக்குக் கட்டாயமாய் இங்கிலீஷ் கற்பிக்கவேண்டுமென்

ருல் அவர்கள் தாம் சொல்லுகிறவைகளில் யாதொன்றையும் செவிகொடுத்துக்கேட்காமல் பாராமுகம் செய்கிருர்களென்றும், சிலர் கோவில்களைக்கட்டவேண்டுமென்றும், சிலர் குளங்களை வெட்டவேண்டுமென்றும் சொல்லுகிருர்களென்றும், சகல விஷயங்களுக்கும் திரவியம் வேண்டியிருப்பதிஞல் அதைப்பற்றி ஒருவரும் கவனிக்கிறதில்லையென்றும், பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிப்பது பெற்ருேர் கடமையென்று அநேகர் அறிகிருர்களில்லையென்றும், இங்கிலீஷ் பாஷையைக் கற்பதிஞல் என்ன பயன் உண்டாகுமென்று எதிர்த்துக் கேட்கிருர்களென்றும் மிகவும் துக்கித்துச்சொல்லி இங்கிலீஷ் பாஷையைக் கற்பதிஞல் வியாபார காரியங்களுக்கு மிகவும் அனுகூலமென்றும், இங்கிலீஷ் வாசித்து வியாபாரம் செய்பவர்கள் ஒரேவிலைக்கு சரக்குகளை விற்பதிஞல் பெருத்த வியாபாரம்செய்து அதிக லாபம் அடைகிருர்களென்றும், ஆகையால் இங்கிலீஷ் பாஷையை அவசியம் கற்கவேண்டுமென்றும் ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ எம். என். இராமசுவாமி அய்யர் அவர்கள், சேலம்:-

நம்முடையவர்கள் வசிக்கும் இடங்களில் இங்கிலீஷ் பாஷையை விருத்திசெய்ய வேண்டுமென்று ஆதரித்தனர்.

சபையோர் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டது.

ஐந்தாவது தீர்மானம்.

கைத்தொழில் வித்தியா பாடசாலைகள்.

"கைத்தொழில் படிப்பானது தேச க்ஷேமத்திற்கு அத்தியாவசியமானதால் நம்மவர்களுக்குள் கைத்தொழில் பாடசாலைகளை ஸ்தாபித்து கல்வியையும் விருத்தி செய்யவேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ என். சுந்தரராவ் அவர்கள், மதுரை:—

ஒரு தேசம் செழிப்படைய வேண்டுமென்ருலும், ஒரு ஜாதியார் முன்னுக்கு வரவேண்டுமென்ருலும் கைத்தொழில் கல்வியே காரணமென்றும், இங்கிலாந்து தேசமானது இந்தியா தேசத்தில் அரைக்கால் பங்கு அளவுள்ளதாயிருந்தும் இவ்வளவு விருத்தியானதற்கு ஆங்கிலேயருடைய

முயற்சியும், கைத்தொழில் அபிவிருத்தியுமே காரணமென்றும், சுதேசிகளுடைய வீடுகளிலேயும், உத்தியோகஸ்தர்களுடைய கச்சேரிகளிலேயும், வர்த்தகர்களுடைய தொழிற்சாலைகளிலேயுமுள்ள குண்டூசி முதல் நங்கூரம் வரை சகல இரும்புச் சாமான்களும், விளக்குகள், மைக்கூடுகள், பேனுக்கள் முதலிய சகல சாமான்களும் ஐரோப்பியருடைய புத்திக்கூர்மையால் உண்டானவைகளென்றும், இங்கிலாந்தின் "கருவயிர" மென்று சொல்லப்படும் நிலக்கரியும், இரும்பும் இங்கிலாந்தின் க்ஷேமத்திற்கு துணைக்கருவிகளாயிருக்கின்றனவென்றும், சேலம் இரும்பு சிலாக்கியமானதென்று பத்திரிகைகள் மூலமாயும், பற்பல கனவான்கள் மூலமாயும் தெரிந்திருந்தும், இத்தேசத்தார்கள் விடாமுயற்சி, ஒற்றுமை முதலியவைகளில்லாமையால் அதைச் சற்றும் கவனிக்காமல் இருக்கிறார்களென்றும், கடியாரத்தின் திறமையும், விலை முதலியவைகளையும் எடுத்துக்காட்டி, இரவும், பகலும் சிரமப்பட்டுப் படித்தாலன்றி, கல்வியானது மற்ற பொருள்களைப்போல விலை கொடுத்து வாங்க முடியாதென்று சொல்லி, ஜப்பானியர்கள் தங்கள் விடாமுயற்சியால் கல்வியை அபிவிருத்தி செய்து ஐரோப்பாவிலுள்ள பல பட்டணங்களுக்கும் போய் நானாவிதமான தொழில்களையும், இயந்திரம் முதலிய சூத்திரங்களின் வேலைப்பாடு, வேலை செய்யும் விதம் முதலிய விபரங்களையும் சாங்கோபாங்கமாய்க் கற்றுக்கொண்டதினுலும், அவர்கள் செய்து விற்கும் நெருப்புப் பெட்டிகளும், குடைகளும், பீங்கான் சாமான்களும், மற்றும் பல பொருள்களும் அநேக காலமாய் நாகரீகம் அடைந்திருக்கும் தேசத்தார்களால் தயாரிக்கப்படும் சாமான்களுடன் போட்டியாய் விற்கப்படுகின்றனவென்றும், ஜப்பானியர் பல இடங்களுக்கும் போய் கைத்தொழில் கல்வி கற்றுக் கொண்டது போக தற்காலம் அவர்களிடம் ஹிந்துக்கள் போய்க் கற்றுக் கொள்ளும்படிக்கு அவ்வளவு தூரம் அபிவிருத்தியாகி முன்னுக்கு வந்திருக்கிறார்களென்றும், ஆகையால் நம்மவர்களும் விடாமுயற்சியாய் கைத்தொழில் கல்வியை விருத்திசெய்ய வேண்டுமென்றும், நாளாவட்டத்தில் நம்முடைய வித்தியார்த்திகளில் சிலரைத் தேர்ந்தெடுத்து நம்முடைய சபைச் செலவில் ஜப்பான் தேசத்திற்கு அனுப்பவேண்டுமென்றும் சொல்லி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ தொ. சீ. மு. சேஷய்யர் அவர்கள், மதுரை:—

பிரஹ்மஸ்ரீ என். சுந்தரராவ் அவர்கள் சொல்லியவண்ணமே கைத்தொழில் கற்கவேண்டுமென்றும், கல்வியையும், கைத்தொழில்களையும்

கற்றாலன்றி யாதொன்றும் நாம் நன்றாய்த் தெரிந்தவர்களாகமாட்டோமென்றும், முன் ஹைக்கோர்ட்டு ஜட்ஜாகயிருந்த காலஞ்சென்ற ஸர். டி. முத்துசாமி அய்யர் அவர்கள், "பேனாவானது உலகத்தை அசைக்கும்" என்று சொல்லியவண்ணம், சகலத்திற்கும் கல்வியே காரணபூதமென்றும், வர்த்தகத்திலுள்ள இரகசியங்களைக் கல்வி கற்றாலன்றி தெரிந்துகொள்ள முடியாதென்றும், நம்மவர்களுக்கு சயபாஷை, ராஜபாஷை, தேசபாஷைகளாகிய இம்மூன்று பாஷைகளும் அவசியம் வேண்டியவைகளென்றும், ரசாயன சாஸ்திரமுறைகளைக் கற்றுக் கையாள முயலவேண்டுமென்றும், தங்கள் பெயரை மாத்திரம் எழுதத்தெரிந்து விட்டால் படித்தவர்களாகமாட்டார்களென்றும், நன்றாய் எழுதவும், ஸ்பஷ்டமாய் வாசிக்கவும் தெரிந்துகொள்ள வேண்டுமென்றும், பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் கட்டாயமாய்க் கல்வி பயிலச்செய்ய வேண்டுமென்றும், பிரஹ்மஸ்ரீ சேலம் முராரி. ராமசுவாமய்யர், முராரி. ரெங்கய்யர் வகையரா சில பிரபுக்கள் சேலத்தில் ஏற்படுத்தியிருக்கும் வித்தியா சபையை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்றும், மதுரை பிரஹ்மஸ்ரீ கே. எஸ். பி. நன்னுசாமி பாகவதர் அவர்கள் மதுரையில் ஸ்கூல் ஸ்தாபிப்பதாக ஏற்பட்டிருப்பதானது மிகவும் சிலாக்கியமான தர்மமும், கௌரவமான எத்தனமாயுமிருக்கிறதென்றும், ஓர் இரதத்தைத் தூக்குவது கஷ்டம், சக்கரம் போட்டிழுப்பது எப்படி மிகவும் சுலபமோ அம்மாதிரியே கல்வியால் சகலமும் கைகூடுவது சுலபமென்றும் சொல்லி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள், சேலம்:—

சேலத்தில் பகலில் சம்பளம் கொடுத்து வாசிக்க முடியாதவர்களுக்கு இராத்திரியில் படிப்பதற்கு ஓர் ஸௌராஷ்ட்ர வித்தியா பாடசாலை ஏற்படுத்திய பிரஹ்மஸ்ரீ முராரி. ராமசுவாமய்யர் அவர்களுக்கும், பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்களுக்கும் மிகவும் கௌரவித்து ஷை வித்தியா பாடசாலையை விருத்தி செய்யும் விஷயத்தில் அவர்களும் மற்றவர்களும் மிக்க சிரத்தையுடன் ஓர் ஸ்திரமான பண்டு ஏற்படுத்த திரவிய சகாயம் செய்வதாக இச்சபையோர்முன் வாக்குத்தத்தம் செய்யப் போகிறார்களாகையால் அதைச் சபையோர் யாவரும் அன்போடு கேட்டு ஆனந்திக்கவேண்டுமாய்ச் சொல்லி முடித்தபின் அடியில் குறித்த கனவான்கள் மேற்கூறிய வித்தியா பாடசாலைக்கு அடியில்கண்ட தொகைகளை நன்கொடையாக அளித்தார்கள்.

## சேலம் ஸௌராஷ்ட்ர ஸ்கூல் பண்டு சந்தா விபர ஜாப்தா.

| | | | ரூ. |
|---|---|---|---|
| பிரஹ்மஸ்ரீ | முராரி. இராமசுவாமய்யர் | அவர்கள் | 500 |
| ,, | முராரி. ரெங்கய்யர் | ,, | 750 |
| ,, | பரமக்குடி இராசுலய்யர் | ,, | 350 |
| ,, | மஞவாது. நரசிம்மய்யர் | ,, | 250 |
| ,, | பரமதி சுப்புராயலய்யர் | ,, | 175 |
| ,, | அச்சி. கோவிந்தராஜுலய்யர் | ,, | 125 |
| ,, | நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் | ,, | 200 |
| ,, | நன்னியா. சொக்கய்யர் | ,, | |
| ,, | கொண்டி. சொக்கய்யர் | ,, | 50 |
| ,, | பாம்பாடி. வீரய்ய பாகவதர் | ,, | 50 |
| ,, | செவுளா. சுப்பய்யர் | ,, | 25 |
| ,, | மஞவாது. நாகேந்திரய்யர் | ,, | 75 |
| ,, | புட்டா. வீ. கிருஷ்ணய்யர் | ,, | 25 |
| ,, | பாரகிரி. கொ. நரசிம்மய்யர் | ,, | 50 |
| ,, | அச்சி. வெங்கடாசலபதி அய்யா | ,, | 25 |
| ,, | கும்பகோணம் இராமலிங்கய்யர் | ,, | 25 |
| ,, | அனந்து. நாகேந்திரய்யர் | ,, | 35 |
| ,, | பதிங்கா. வீரய்யர் | ,, | 25 |
| | | ஆக மொத்தம் ரூ. | 2735 |

மேற்கண்ட ரூபாய்களை 15 நாளில் ஷை சபை பொக்கிஷதார் அவர்களிடம் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டு மறுநாள் 3-மணிக்கு மஹாநாடு கூடுமென்று தெரிவிக்கப்பட்டு சபை கலைந்தது.

## மூன்றும் நாள் நடவடிக்கைகள்.

## 2—6—29.

### ஆறவது தீர்மானம்.

ஸௌராஷ்ட்ர மித்திரன்.

"ஸௌராஷ்ட்ருக்குள் கல்வி, நாகரீகம், வர்த்தகம், கைத்தொழில், சுஜாதி அபிமானம், ஒற்றுமை முதலியவைகள் விருத்தியாகும் பொருட்டு "ஸௌராஷ்ட்ர மித்திரன்" என்று பெயர்கொண்ட மாதாந்தர தமிழ்ப் பத்திரிகை நடத்த வேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்கள், மதுரை:—

நம் வகுப்பாருக்குள் நடக்கும் சபா விஷயங்கள், தர்ம பரிபாலன விஷயங்கள் முதலிய சகல சங்கதிகளையும் ஸௌராஷ்ட்ரர்கள் எல்லோரும் இலகுவாய்த் தெரிந்து கொள்ளும் பொருட்டு ஸௌராஷ்ட்ர வகுப்பாருக் கென்றே ஓர் பத்திரிகை பிரசுரம் செய்யவேண்டுமென்றும், பத்திரிகை களின் பிரயோஜனங்கள் அளவற்றனவென்றும், ருஷியா சக்கரவர்த்தியவர் கள் ஒரு சமயத்தில் தாம் யாதொன்றுக்கும் அஞ்சாவிட்டாலும் சமாசாரப் பத்திரிகைகளை மட்டும் எப்போதும் மதிப்பேனென்று சொல்லியிருக்கிற படியால் சமாசாரப் பத்திரிகைகளில் எழுதும் சங்கதிகள் பற்பல மனிதரு டைய மனதையும் கவரத்தக்கதாயிருக்கிறதென்றும், நம்முடைய மஹா ராணியம்மாள் அவர்களுடைய ஆளுகையில் காலமும், தூரமும் இல்லை யென்றுசொல்லும்படியாக ரயில்,தபால்,தந்தி முதலியவைகள் விசேஷமாய் விருத்தியாகி இருப்பதால் சமாசாரங்கள் இலகுவாய்த் தெரிந்து கொள்ளலா மென்றும், 1900ம் வருஷத்தில் பாரிஸ் நகரத்தில் நடக்கப்போகிற கண் காக்ஷியைப் பற்றியும் அக்கண்காக்ஷியில் நடக்கும் சகல விபரங்களைப்பற்றி யும் பத்திரிகைகள் மூலியமாயல்லாமல் வேறு விதமாய்த் தெரிந்துகொள்ள முடியாதென்றும், சமாசாரப் பத்திரிகை பிரசுரஞ்செய்வதால் நம்மவர்களில் ஒற்றுமை, நாகரீகம், சுஜாதியபிமானம், வர்த்தகவிருத்தி முதலியவைகள் வரவர அதிகப்படுமென்றும், காலஞ்சென்ற சேலம் பிரஹ்மஸ்ரீ இராம சுவாமி முதலியார் அவர்கள் சீமைக்குப் போயிருக்குங்காலத்தில் அவருக்கு

வேலை செய்யவந்த நாவிதன் அன்று காலைப் பத்திரிகையில் பிரசுரமாயிருந்த வர்த்தமானத்தைப் பார்க்கவில்லையாவென்று முதலியாரவர்களிடம் கேட்டபோது அவருக்கு லஜ்ஜையாயிருந்ததென்று சொல்லி யிருப்பதைத் தெரிவித்து சமீபத்தில் நாகரீகமடைந்த ஜப்பான் தேசத்திலும் ஏராளமான சமாசாரப் பத்திகைகள் பிரசுரமாகின்றனவென்றும், வர்த்தக விருத்திக்கு போக்குவாவுக்கேற்ற நல்ல ரஸ்தாக்கள் எப்படி தேவையோ, அப்படியே நாகரீகம், ஒற்றுமை முதலியவைகள் விருத்தியாக வேண்டுமென்றால் கல்வி யுடன் சமாசாரப் பத்திரிகைகளும் அவசியம் வேண்டுமென்றும் சொல்லிப் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகாய்யர் அவர்கள், சேலம்:—

பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்கள் பத்திரிகை விஷயங்களைக் குறித்து சொல்லியது தமக்கும் சரிதானென்றும், "ஸௌராஷ்ட்ர மித்திரன்" என்ற பெயருடன் வருஷம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் சந்தாவில் பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்களுடைய அச்சாபீஸில் பிரசுரம் செய்தனுப்பவேண்டுமென்றும், அதை ஸௌராஷ்ட்ரர்கள் எல்லோ ரும் வாங்கி வாசிக்கவேண்டுமென்றும், ஸௌராஷ்ட்ரர்கள் வசிக்குமிடங் களிலிருந்துவரும் சங்கதிகளையும், நாகரீகம், வர்த்தகம், ராஜாங்கம், பொது நன்மை முதலிய பரோபகார தர்ம விஷயங்களை அதில் பிரசுரித்து வர வேண்டுமென்றும், சமாசாரப் பத்திரிகைகளை வாசிப்பதினால் சுறுசுறுப்பும் கல்வியும், அபிவிருத்தி ஆவதுடன் வர்த்தகம் பிரபலமாகுமென்றும், கோவில் விஷயங்களும், சபைகளை நடத்தும் முறைகளும், மற்றும் பற்பல நன்மையான விஷயங்களும் நன்றாய்த் தெரிய வருமென்றும் சொல்லி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள், மதுரை:-

நம்மவர்களுக்கென்றே பத்திரிகைகள் பிரசுரம் செய்தனுப்புவது அவசியமாதலால் தக்ஷணம் பத்திரிகைக்கு கையொப்பங்கள் வாங்க வேண்டு மென்று சொல்லி ஆதரித்தனர். பத்திரிகைக்காக சுமார் 200 கையொப்பங் கள் வாங்கப்பட்டன.

அக்கிராசனுதிபதி அவர்கள் சபையோரை நோக்கி ஸௌராஷ்ட்ர மித்திரனை எல்லோரும் அபிமானித்து வாங்கி வாசிக்கவேண்டுமென்றும், அதனல் வெகு நன்மைகளுண்டாகுமென்றும் சொல்ல, சபையோரெல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

## ஏழாவது தீர்மானம்.

"திராவிடாந்திர புரோகிதர்களுக்குப் பதிலாக நன்ருய்க்கற்றுணர்ந்த சுஜாதி புரோகிதர்களை நியமிக்கவேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ புளியடி. முனிநாகேந்திர பாகவதர் அவர்கள், மதுரை:-

கோத்திர சூத்திர பிரவராதிகளுள்ளவர்களாயும், கர்ப்பாதானம் முதலிய சோடச வேதோக்த கர்மங்களும், ஜாதகமிருதகங்களில் பத்து நாள் ஆசௌசங்களும் அனுதியாய் அனுஷ்டித்துக் கொண்டு வருகிறவர்களாயுமிருக்கிற நம்மவர்களுக்கு சுஜாதி புரோகிதர் இருக்குமிடங்களில் வேதோக்த கர்மானுஷ்டானங்கள் சரியாய் நடத்தப்படுகிறதென்றும், திராவிடாந்திரர்கள் நம்மவர்களுக்கு புரோகிதர்களாயிருக்கிற இடங்களில் மட்டும் நம்மவர்கள் மீது அபிமானக்குறைவால் கிரியைகள் செவ்வையாய் நடத்தப்படுகிறதில்லை யென்றும், சூத்திராதிகளுக்கு மட்டும் புராணேக்தம் ஏற்பட்டிருப்பதால் நாம் வேதோக்த கர்மானுஷ்டானங்களின் பிரகாரம் சுஜாதி புரோகிதர்களைக்கொண்டு கிரியைகளை நடத்தவேண்டுமென்றும், திருமண்தரித்துக்கொண்டு சிலர் மீசை வைத்துக்கொள்வது பிராஹ்மண ஆசாரத்துக்கு விரோதமாதலால் அப்படி வைத்துக்கொண்டிருக்கிற சிலர் எடுத்து விடவேண்டுமென்றும், சந்தியா வந்தனுதி அனுஷ்டானங்களைச் செவ்வையாய்த் தெரியாதவர்கள் தக்க ஆசாரியர்களிடத்தில் கற்றுக் கொண்டு ஸ்பஷ்டமாய் உச்சரிக்கவும் வசனிக்கவும் வேண்டுமென்றும், கர்மானுஷ்டானங்களே ஜாதி ஆசாரத்தைக்காட்டுமென்றும், ஸ்ரீகிருஷ்ண பகவான் அர்ச்சுனனுக்குபதேசித்த சில சுலோகங்களை பகவத்கீதையினின்றும் எடுத்துக்காட்டி கர்மானுஷ்டானங்கள் தவருமல் செய்ய வேண்டுமென்றும், காலையில் ஸ்நானம் செய்து பஞ்சகச்சம் போட்டுக் கொண்டு கிரகஸ்தர்கள் கர்மானுஷ்டானங்களைச் செய்யவேண்டுமென்றும்,

சேலத்திலுள்ள கனவான்கள் சௌசாசார கர்மானுஷ்டானுதிகளை மிகச் சிரத்தையுடன் நடந்து கொள்ளுகிறார்களென்றும், தேகம் எடுத்ததற்கு ஒவ்வொருவர் செய்யவேண்டியது கர்மானுஷ்டானங்களே என்றும் சாங் கோபாங்கமாய்ச் சொல்லி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புரோகிதம் குப்பய்யர் அவர்கள், சேலம்:-

நம் சுஜாதியாரில் சிலர் 60 வருடங்களுக்கு முன் சேலத்தில் ஆசார விசாரணையில் சிரத்தையில்லாமலிருந்தார்களென்றும், சுமார் 50 வருடங்களுக்கு முன் காலஞ்சென்ற பிரஹ்மஸ்ரீ வெங்கடசூரி அய்யங்கார் அவர்களும், பிறகு பிரஹ்மஸ்ரீ இராமசாமய்யங்கார் அவர்களும் சேலத் திற்கு வந்து ஆசார விஷயங்களைச் சிரத்தையுடன் கவனிக்கும்படி செய்தார் களென்றும், அவர்களும் நம் சுஜாதி புரோகிதர்களை வைத்து நடத்த வேண்டுமென்று சொன்னதின் பேரில் அவ்வாறே அநேகமாய் நடந்து வரு கிறதென்றும், திராவிடாந்திர புரோகிதர்கள் மட்டும் புராணோக்தப் பிரகாரம் சிலருக்கு சில சமயங்களில் கிரியைகளை நடத்தும் போது நமக்கெல்லாம் மிகவும் மனம் புண்படுகிறதென்றும், நம்முடையவர்களில் சிலர் மட்டும் சிரார்த்தம், நாமகரணம் முதலியவைகளை சிரத்தையாய்ச் செய்கிறார்களில்லை யென்றும், இனிமேல் அவர்களையும் விதிப்படி செய்விக்க வேண்டுமென்றும், எல்லாஜீயம், வைத்திஞதீயம் இவைகளின்படி திரிபிண்டம், ஷட்பிண்டம் இவ்விரண்டு வகையும் செய்யலாமென்றும், எவ்வளவு பெரிய கிரியையானு லும், எவ்வளவு செலவு செய்தாலும் புரோகிதர்களுக்கு மாத்திரம் சுவல்ப மாய்ச் சம்பாவனை கொடுத்து வருகிறார்களென்றும் தம் கஷ்ட நிஷ்டூரத்தை வியக்தமாய்த் தெரிவித்து சுஜாதி புரோகிதர்களை வைத்து வேதோக்த கர் மானுஷ்டானங்களை செய்யவேண்டுமென்று ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள், சேலம்:—

வேதோக்த மந்திரங்களால் கிரியைகளை நடப்பிக்காத திராவிடாந்தி ரர்களை வைத்துக் கொண்டு புரோகிதம் செய்து கொள்ளக்கூடாதென்றும், நாம் நாகரீகம், ஆசாரம் முதலியவைகளை விருத்திக்குக் கொண்டுவரவேண்டி யிருக்கிறதென்றும், சில புராணோக்த மந்திரங்களையும், வேதோக்த மந்திரங் களையும் உதாரணமாக விவரித்துரைத்து ஸ்திரீ புருஷ நாமங்களைக்கொண்

டும் முகார விந்தத்திலுள்ள பிரம்மதேஜஸைக் கொண்டும் ஒருவனை பிராஹ்மணனென்று ஸ்பஷ்டமாய் அறிந்து கொள்ளலாமென்றும், உபநயனம், ஜாதகர்மம், சீமந்தம், சிரார்த்தம் முதலிய . எல்லா கிரியைகளும் வேதோக்தமாய்தொன்றுதொட்டு செய்து வருவதினாலும், நம்மை சுவாமியினுடைய திருநாமங்கள் வைத்து அழைப்பதினாலும், கோத்திர சூத்திரப் பிரவராதிகள் நமக்குள் பரம்பரையாய் ஏற்பட்டிருப்பதினாலும், நம்மில் சிலரை திராவிடர் முதலிய அன்னியர்கள் செட்டிகள் என்று கூப்பிடுவது சரியல்லவென்றும், நமக்குள்ளே ஒருவரையொருவர் "இராமய்ய செட்டி அவோ", "கிருஷ்ணய்ய செட்டி அவோ" என்று கூப்பிடும் வழக்கமில்லாமல் "இராமய்யான் அவோ", "கிருஷ்ணய்யான் அவோ", "நரசிம்மய்யான் அவோ" என்று கூப்பிடுவது வழக்கமாய் இருப்பதினால் நம்மவர்களுக்கு செட்டிப்பட்டமே எப்பொழுதும் இல்லையென்றும், சந்தியாவந்தனாதிகளைக் காலம் தவறாமல் செய்கிறவர்கள் முகத்தில் பிரம்மதேஜஸு ஜொலிக்கிறதென்றும், ஒவ்வொரு ஊரிலும் வேதோக்த கர்மானுஷ்டானங்களை செய்யாதிருப்பவர்களைச் செய்விக்கச் செய்யவேண்டுமென்றும், மதுரையில் முற்காலத்தில் ஸௌராஷ்ட்ர பிராஹ்மணர்கள் உபாகர்மம் நடத்தும் காலத்தில் மதுரை கோட்டை அதிகாரி ஜோஸ்யம் வெங்கடரங்கய்யர் அவர்கள் நம்முடைய வர்ணாசிரம வரலாற்றை யறியாதவராய்ப் பொறாமையுடன் வேதோக்த உபாகர்மம் செய்தவர்களை திரிசிரபுரத்திற்கு அழைத்துக் கொண்டு வந்து அக்காலத்தில் ஆண்டுகொண்டிருந்த மஹாராணியாகிய மங்கம்மாளிடத்தில் ஒப்புவித்தபோது, மஹாராணியவர்கள் விசாரிக்கத்தலைப் பட்டு, பாபன்ன சோமயாஜிகளையும், நகரி சாமாஜிகளையும், ஸ்ரீரங்கம் திருவானைக்காவல் ஸ்தலங்களிலிருக்கும் ஆசாரிய புருஷர்கள், வித்வாம்சர்கள், தேசதேச பூர்வோத்தரங்களறிந்த பெரியோர்கள் சாஸ்திர சம்மதமாக விசாரித்து அவர்கள் சொல்லும் தீர்மானக் கிரமங்களை எழுதிவரும்படி ஆக்ஞாபிக்க, அவர்கள் ஸ்ரீரங்கம் சன்னதியில் சபை கூட்டி, சபையோர் ஸௌராஷ்ட்ரர்களை தங்களுடைய பூர்வீக குலகோத்திர ஆசாரானுஷ்டானாதிகளைச் செவ்வையாய் விசாரித்து, அவர்களால் அறிந்துகொண்டு, அநேக சாஸ்திரங்களையும் ஆராய்ந்துபார்த்து, இச்ஸௌராஷ்ட்ரர்களுக்கு பிராஹ்மணத்துவம் அனாதியாக உண்டென்று ஜெயப் பத்திரிகை எழுதி, அதில் சபையோர்கள் கையொப்பமிட்டு, மஹாராணி மங்கம்மாள் அவர்களுக்கு அனுப்பிய தன் பேரில், மஹாராணியவர்கள் சாலிவாகன சகாப்தம் 1627-வது

ஆண்டு பார்த்திவஞு அற்பசிமீ 19உயில் ஸௌராஷ்ட்ரர்களுக்கு பிராஹ்மணத்துவம் பூர்வீகமாக உண்டென்றும், வேதோக்தமான அனுஷ்டானங்களே உள்ளவர்களென்றும் எழுதி "ஸ்ரீமங்கம்ம வ்ராலு" என்று தெலுங்கில் கையொப்பம் செய்து ஓர் அபயப்பிரதான சாசனம் கொடுத்தார்களென்றும், அதன் நகல் தெலுங்கெழுத்தில் ஸௌராஷ்ட்ரர்கள் வசிக்கும் சில இடங்களிலிருப்பதென்றும் சொல்லி சுஜாதி புரோகிதர்களை வைத்து கிரியைகளை நடத்தவேண்டுமென்று ஆதரித்தனர்.

உபாகர்ம விஷயமாக ஏற்பட்ட விவாதாம்சத்தை மஹாராணியாகிய மங்கம்மாள் அவர்களுடைய உத்தரவுப்படி ஸ்ரீரங்கத்திலுள்ள சபையோராகிய வித்வான்கள் விசாரித்த சாசனம் ஒன்று.

சபையோர் மஹாராணியாகிய மங்கம்மாள் அவர்களுக்கு ஸௌராஷ்ட்ரர்களுக்குப் பிராஹ்மணத்துவம் உண்டென்று தங்கள் கையொப்பத்துடன் எழுதியனுப்பிய சாசனம் ஒன்று.

ஷை வித்வான்களுடைய அபிப்பிராயப்படிக்கு மஹாராணியாகிய மங்கம்மாள் அவர்கள் தங்கள் கையொப்பத்துடன் எழுதியனுப்பிய சாசனம் ஒன்று.

இம்மூன்று தெலுங்கு சாசனங்களின் நகல்கள் பின்னுல் அச்சிடப்பட்டு சேர்க்கப்பட்டிருக்கின்றன. (Appendix A, B & C.)

அமாவாசைத் தர்ப்பணம்.

பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமய்யர் அவர்கள், மதுரை:-

அமாவாசை புண்ணிய காலங்களில் தர்ப்பணம் செய்யாத சிலர் சிரத்தையுடன் தப்பாமல் செய்யவேண்டுமென்றும், மடிமயிலே பேதங்களை எல்லோரும் நன்ருய்த் தெரிந்து கொள்ளவேண்டுமென்றும் சொல்ல பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை, பட்டணம் சுப்பய்யர் அவர்கள் சபையோரை நோக்கி அமாவாசைத் தர்ப்பண விஷயமும் ஆசார விஷயமும் தெரியப்படுத்தியதன் பேரில் சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கலாயிற்று.

## எட்டாவது தீர்மானம்.

### வெகுமானங்கள்.

"ஸௌராஷ்ட்ர வித்தியார்த்திகளை கல்வியில் முன்னுக்குக்கொண்டு வரும் பொருட்டு இங்கிலீஷ், ஸௌராஷ்ட்ரம், சமஸ்கிருதம், கணிதம் முதலிய பாடங்களில் பரீக்ஷைகளேற்படுத்தி அதில் முதன்மையாய்த் தேறும் குழந்தைகளுக்கு புஸ்தகரூபமாயாவது, மெடல்களாகவாவது, ரொக்கமாயாவது வெகுமதிகள் கொடுக்கவேண்டுமென்பது".

பிரஹ்மஸ்ரீ என். சுந்தரராவ் அவர்கள், மதுரை:—

ஐரோப்பா கண்டத்திலுள்ள சர்வ கலாசாலைகளிலும் சென்னை சர்வ கலாசாலையிலும் பரீக்ஷைகள் ஏற்படுத்தி வெகுமதிகளளித்து வருவதினால் வித்தியார்த்திகள் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் படிக்கிறார்களென்றும், இனாமாகப் புஸ்தகங்களைக் கொடுப்பதினாலும், சம்பள வகையறாக்களுக்காக ஸ்காலர்ஷிப்புகள் கொடுப்பதினாலும், புத்திக்கூர்மையுள்ள வித்தியார்த்திகளுக்கு மெடல்கள் என்னும் கௌரவ பதக்கங்கள் கொடுப்பதினாலும் உற்சாகமுண்டாகிறதென்றும், மதுரையில் தமுக்கம் பிரைஸ் என்றும், சேதுபதி இனாமென்றும், நீலகண்ட சாஸ்திரியார் இனாமென்றும் பல கனவான்களால் கொடுக்கப்படும் இனாம்கள் உண்டென்றும், இவைகள் எல்லாம் வித்தியாபிவிருத்திக்கும் சுறுசுறுப்புக்கும் ஹேதுவாயிருக்கிறதென்றும், கவர்ண்மெண்டாரும் வித்தையில் பின்னடைந்திருக்கிற வகுப்புக் குழந்தைகளுக்கு அதிகக் கிராண்டும், புஸ்தகம், சம்பள வகையறாக்களுக்கு உபயோகமாகும் பொருட்டு ஸ்காலர்ஷிப்பென்னும் உபகாரச் சம்பளங்களும் கொடுத்து வருகிறார்களென்றும், நம்முடைய குழந்தைகள் கல்வியில் முன்னுக்கு வரும் பொருட்டு ஏககாலத்தில் பரீக்ஷைகள் ஏற்படுத்தி முதன்மையாய்த் தேறும் வித்தியார்த்திகளுக்கு புஸ்தகம், மெடல், இனாம் முதலியவைகளைக் கொடுக்க வேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ ஜே. கிருஷ்ணய்யர் அவர்கள், மதுரை:—

ஸௌராஷ்ட்ர பாலர்கள் படிப்பதற்காக ஸ்கூல்களை ஏற்படுத்தியும், பரீக்ஷைகள் வைத்தும், இனாம் முதலியவைகளைக் கொடுத்தும் வந்தால் நம்

முடைய பிள்ளைகள் முன்னுக்கு வருவார்களென்றும், மதுரையிலுள்ள வித்தியார்த்திகள் முன்னுக்கு வந்திருக்கிறதற்குக் காரணம் இனும் வகையறுக்களையும் மற்றும் சில பிரயோஜனங்களையும் கொடுத்ததினால் தானென்றும், மதுரை நேடிவ் காலேஜில் ஸௌராஷ்ட்ர வித்தியார்த்திகளில் பாத்திரமானவர்களிடம் பாதி சம்பளம் வாங்குகிறார்களென்றும், ஸ்கூல்களைக்கட்டி சம்பளமில்லாமல் புஸ்தகம் முதலியவைகளையும் வாங்கிக்கொடுத்து இனும் முதலியவைகளைக் கொடுப்பதாயிருந்தால் நம்முடைய குழந்தைகள் முன்னுக்கு வருவார்களென்றும் சொல்லி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ கௌடு. இராமலிங்கய்யர் அவர்கள், மதுரை:—

கல்வியைப்பற்றி ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டியது மிகவும் அவசியமென்றும், சில வருஷங்களுக்கு முன் குழந்தைகளுக்கு ஆறு அல்லது எழு வயதாய் விட்டால் நெசவு வேலைக்கு அனுப்பிவிடுகிறதென்றும், அதனால் நம்மவர்கள் வித்தையில்லாமல் முன்னுக்கு வாராமல் போய் விட்டார்களென்றும், பெற்றோர்கள் குழந்தைகளை அன்பாய் நடத்த வேண்டுமென்றும், சிலர் நினைக்கிறபடி மஹாநாடுகள் வீணுய்க்கூடி காலங்கழிக்கிற கூட்டங்களல்லவென்றும், நாம் தீர்மானிக்கிற ஒவ்வொரு விஷயமும் அனுஷ்டானத்திற்கு வரும்படி கடவுளைப் பிரார்த்திக்கவேண்டுமென்றும், எல்லாவற்றையும் செய்வது சாத்தியமல்லவென்று ஒன்றையும் செய்யாமலிருப்பது மதியீனமென்றும், முயற்சி செய்தால் சகலமும் கைகூடுமென்றும், பூர்வத்தில் கிரிஸ்டோபர் கொலம்பஸ் விடா முயற்சியால் அமெரிக்கா கண்டத்தைக் கண்டுபிடித்தாரென்றும், அது இப்பொழுது கல்வியிலும், சாஸ்திரத்தேர்ச்சியிலும், நாகரீகத்திலும், செல்வத்திலும், யுத்தவீரத்திலும் மிகவும் சிறந்த கண்டமாயிருக்கிறதென்றும், நாம் கொஞ்ச காலத்திற்கு முன் கல்வியில் பின்னடைந்தவர்களாகப் பாவிக்கப்பட்டபோதிலும் தெய்வாநுகூலத்தினால் நமக்கு நற்காலம் பிறந்திருப்பதாக இம்மஹாநாட்டினால் தெரியவருகிறதென்றும் சொல்லி ஆதரித்தனர்.

சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகாய்யர் அவர்கள், சேலம்:—

சேலத்தில் கிறிஸ்தவர்களால் நடத்தப்பட்டுவருகிற ஓர் பெண்பாடசாலை இருக்கிறதென்றும், அப்பாடசாலையானது கூஞ்சுன் குடும்பத்தாரால்

தர்மத்திற்கென்று ஏற்பட்ட சாவடியில் வைக்கப்பட்டிருக்கிறதென்றும், கூஞ்சுன் குடும்பத்தார் சாவடிக்கு வாடகை வாங்குகிறார்களென்றும், ஸௌ ராஷ்ட்ராருக்குள் சொந்தமாய் ஓர் பெண்பாடசாலை இருக்கவேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

அப்பொழுதே அச்சாவடிக்குச் சொந்தக்காரரான சேலம் பிரஹ்மஸ்ரீ பரமதி. வெ. பிள்ளை லோகாச்சாரியார் சாவடியை பெண்பாடசாலை வைத்து நடத்துவதற்காக பூரண சம்மதமாய்த் தம்முடைய மனோராஜியால் தத்தம் செய்தார். சபையோர் எல்லோராலும் அத்தத்தமானது கரகோஷத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டது. வெ. பிள்ளைலோகாச்சாரி என்று அசல் பிரதியில் கையொப்பம் வாங்கப்பட்டது.

பிரஹ்மஸ்ரீ வி. என். இராமசுவாமி அய்யர் அவர்கள், திருச்சினாப்பள்ளி:-

பெண்களுக்குக் கல்வி கற்றுக் கொடுக்கவேண்டிய அவசியமென்றும், ஆண்பிள்ளைகளைவிட பெண்பிள்ளைகள் புத்தி கூர்மையில் அதிகமானவர்களென்று ஐரோப்பியர்களால் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறதென்றும், நம்முடைய மதியீனத்தால் பெண்கல்வியை அசட்டை செய்கிறோமென்றும், இல்லற தர்ம பரிபாலனத்திற்கும் தன் பர்த்தாவுக்கு உயிர்த்துணைவியாயிருந்து வருவதற்கும் பெண் கல்வி அவசியமென்றும், உதாரணங்களை எடுத்துக் காட்டியும், தெய்வப்புலமைத் திருவள்ளுவர் குறள்களையும், பட்டினத்தார் முதலியவர்கள் சொல்லியுள்ள செய்யுள்களையும் சொல்லி, தச்சனிடத்தில் சரியான ஆயுதங்களில்லாவிட்டால் அவனால் எப்படி வேலைகளை ஒழுங்காய்ச் செய்யமுடியாதோ அம்மாதிரியே தாய் தந்தையர் தம்முடைய குழந்தைகளுக்கு செய்யவேண்டிய பல கடமைகளையும், நன்றாய்க்கவனித்துக்கொள்ள வேண்டுமென்றும், மருந்து, கஷாயம் முதலியவைகளை தகப்பன் கொடுத்தால் ஏற்றுக்கொள்ளாமல் தாய் கொடுத்தால் பிரியமாய் ஏற்றுக்கொள்ளுவதைச் சாதாரணமாய் எல்லோரும் பார்த்திருக்கிறோமென்றும், பெண்ணைப்பெற்றவர்களிடம் ஆணைப்பெற்றவர்கள் வந்து பெண் கேட்பது சகஜமாயிருக்கிறதென்றும், இக்காரணங்களால் பெண்களுக்குக் கௌரவம் ஏற்பட்டிருக்கிறதென்றும், பெற்றோர்கள் புத்திசாலிகளாயிருந்தால் குழந்தைகளும் புத்திசாலிகளாயிருப்பார்களென்றும், பூர்வத்தில பெண்கள் கல்வி கற்று எவ்வளவோ நியாயங்களைத் தீர்த்து வந்தார்களென்றும், பெண் கல்வியால்

யாதொரு விதமான அபாயமும் பாதகமுமில்லை என்றும் அநேக நியாயங்களை எடுத்துக்காட்டி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ கு. இராமசுவாமி பாகவதர் அவர்கள், வாலாஜாப்பேட்டை:-

முதலில் கும்பகோணத்திலும், இரண்டாவது மதுரையிலும் கூடி மூன்றாவதாக இம்மஹாநாடு சேலத்தில் கூடியிருக்கிறதென்றும், மூன்றாவது இடமாகிய சேலத்தில் ஸ்கூல்கள் ஏற்படுத்தவேண்டுமென்றும், சந்தியா அனுஷ்டானங்களையும் அமாவாசைத் தர்ப்பணங்களையும் சிரத்தையாய்ச் செய்ய வேண்டுமென்றும், அந்தந்த வருஷத்திய மஹாநாட்டின் ரிப்போர்ட்டு சீக்கிரம் அச்சிட்டு பிரசுரம் செய்ய வேண்டுமென்றும், பெண்பிள்ளைகள் கல்வி கற்கவேண்டியது மிகவும் அவசியமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

பிரஹ்மஸ்ரீ டி. என். சுப்பய்யர் அவர்கள், சேலம்:-

கல்வியை முயற்சிசெய்து விருத்திக்குக் கொண்டு வருவது மிகவும் அவசியமென்று எடுத்துரைத்தனர்.

பிரஹ்மஸ்ரீ வடகரை சுந்தராச்சாரியார் அவர்கள், மதுரை:-

பாலிகைகளுக்குக் கல்வி மிகவும் அவசியமென்றும், ஆசாரம் முதலியவைகளுக்குக் கல்வி ஆதாரமாய் இருப்பதால் அவசியமாய்ப் படிக்கவேண்டுமென்றும், கச்சம் போட்டுக் கொள்ளாத பெண்கள் அவசியமாய்க் கச்சம் போட்டுக்கொள்ள வேண்டுமென்றும் சொல்லி முடித்தனர்.

இவடம் விஜயஞ்செய்திருக்கும் பிரபுக்கள் தங்கள் தங்கள் ஊர்களில் அவசியமாய் பாலிகா பாடசாலைகள் ஏற்படுத்தவேண்டுமாய் அக்கிராசநாதிபதி அவர்கள் தெரிவிக்க, சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

சத்திர தத்தம்.

அடியிற்கண்ட கனவான்கள் தம் முன்னோரால் சேலம் பென்னுடம். வெங்கட்ராமய்யர் வீதியின் கீழ்புரம், சிரேணியின் தென்புரம் கடைசியில் கட்டப்பட்டிருக்கிற சத்திரத்தை சபையோருக்குத் தத்தம்பண்ணி சத்தி

ரத்தை ஒருவாரத்திற்குள் சபைக்கு ஒப்புவிப்பதாய் சபையோர்கள் அறியும்படி பகிரங்கமாய் ஒப்புக்கொண்டார்கள். தத்தமானது கரகோஷத்துடன் அங்கிகரிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| பிரஹ்மஸ்ரீ | புரோகிதம் குப்பய்யர் | அவர்கள் |
| ,, | லகுடுவா. லக்ஷ்மணய்யர் | ,, |
| ,, | லகுடுவா. வெ. நன்னய்யர் | ,, |
| ,, | லகுடுவா. மீனாக்ஷி அய்யர் | ,, |
| ,, | லகுடுவா. நன்னகுப்பய்யர் | ,, |
| ,, | லகுடுவா. ஜனார்தனமய்யர் | ,, |
| ,, | லகுடுவா. பூல் நன்னய்யர் | ,, |
| ,, | லகுடுவா. பு. ரா. கிருஷ்ணய்யர் | ,, |
| ,, | லகுடுவா. ரெங்கய்யர் | ,, |

அசல் பிரதியில் மேற்கண்ட கனவான்களுடைய கையொப்பங்கள் வாங்கப்பட்டன.

1899ஞ்
ஜூன்மீ 2உ

அ. கஸ்தூரி ரேங்கய்யர்,
அக்கிராசனாதிபதி.

## நான்காவது நாள் நடவடிக்கைகள்.

1899ஞ் ஜூன்மீ 3உ காலே 9-மணிக்கு பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்கள் வீட்டில் சப்ஜெக்ட் கமிட்டியார் மீட்டிங் கூடி அடியில் கண்ட விஷயங்கள் தீர்மானிக்கப்பட்டன:—

ஆசார விசாரணைக் கர்த்தாவை நியமிப்பதைப்பற்றி அடுத்த வருஷம் கூடும் மஹாநாட்டில் யோசிப்பதென்றும், ஆசார விசாரணைக்கர்த்தாவானவர் மூன்று வருஷத்திற்கு ஒருதரம் புதிதாய் நியமிக்கப்படவேண்டுமென்றும், அவர் கிரஹஸ்தாயிருக்கலாமென்றும், மார்த்துவ, ஸ்மார்த்த, வைஷ்ணவாதி பேதங்களில்லாதவராயும் ஸமஸ்கிருதாதி வேதபாடங்களில் நிபுணராயிருப்ப

வரையும் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், ஸௌராஷ்ட்ர பிராஹ்மணர்கள் பஞ்ச கௌடர்களில் மைதில கௌட வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்று தெரிய வருகிறபடியால் அதற்குவேண்டிய ரிகார்டுகளையும் ஆதாரவுகளையும் பெறுவதற்காக கவர்ண்மெண்டாருக்கு மனுச்செய்துகொள்ள வேண்டுமென்றும், ஸௌராஷ்ட்ர பாஷா லிபியின் பொருட்டு சிலகனவான்களை சென்னைக்கு அனுப்பவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டு சபை கலைந்தது.

அக்கிராசனாதிபதி அவர்கள் தேக அசௌக்கியம்.

வேறு அக்கிராசனாதிபதி நியமனம்.

உறையூர் பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி. கஸ்தூரிரெங்கய்யர் அவர்களுக்கு தேக அசௌக்கியமானபடியால் திருச்சிறுப்பள்ளி பிரஹ்மஸ்ரீ கொப்பு. இராமசுவாமி அய்யர் அவர்கள் அன்று அக்கிராசனாதிபதியாய் வீற்றிருந்து பாக்கி விஷயங்களை முடிவு செய்யவேண்டுமாய் மதுரை பிரஹ்மஸ்ரீ தொ. சீ. மு. சேஷய்யர் அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு, பிரஹ்மஸ்ரீ என். கே. இராமலிங்கய்யர் அவர்களால் ஆதரிக்கப்பட்டு, சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டது.

மூன்றுவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாட்டிலிருந்து சேலம் கலெக்டர் அவர்கள் மூலமாய் சென்னை கவர்ண்மெண்டாருக்கு அனுப்பும்படி மதுரை ஸௌராஷ்ட்ர ஸபை கௌரவ காரியதரிசி பிரஹ்மஸ்ரீ வி. யஸ். இராமய்யர் அவர்கள் அனுப்பியிருந்த இங்கிலீஷ் விண்ணப்பத்தை தமிழில் அர்த்தம் செய்து சபையில் வாசித்துக்காட்டி அசல் கவர்ண்மெண்டாருக்கு அனுப்பப்பட்டது. அசல் விண்ணப்பம் இங்கிலீஷ் பாஷையில் அனுபந்தமாய் அச்சிடப்பட்டு பின்னால் சேர்க்கப்பட்டிருக்கிறது. (Appendix D.)

பத்தாவது தீர்மானம்.

ஸௌராஷ்ட்ர கிளைச் சபைகள்.

"சபைகள் இல்லாத இடங்களில் ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாட்டிற்கு கிளைச் சபைகள் ஏற்படுத்த வேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ தொ. சி. மு. சேஷய்யர் அவர்கள், மதுரை:-

சபைகளை வைப்பதினால் ஒற்றுமையும், நீதியும், சீர்திருத்தங்களும், வாக்குச் சாதுர்யமும், உபந்நியாச சக்தியுமுண்டாகுமென்றும், மாக்ஷிமை தங்கிய சென்னை கவர்னர் கனம் ஹாவ்லாக் பிரபு அவர்கள் மதுரைக்கு வந்திருந்தபோது, வந்தனோபசாரப் பத்திரிகை கொடுக்கப்பட்டு, அதற்கு மேன்மையும் அபிமானமுமான பதில் கிடைத்தது மதுரை ஸௌராஷ்ட்ர உபந்நியாச சபையாருடைய நன்முயற்சியாலென்றும், சபையில்லாதிருந்தால் யாதொன்றும் நடந்திராதென்றும், மதுரையில் ஸௌராஷ்ட்ர சபை வைக்கப்பட்டிருப்பதால் மஹிமைகள் வசூலாகி வருஷந்தோறும் பிரக்கியாதியுடன் பிரம்மோற்சவம் நடந்து வருகின்றதென்றும் சொல்லி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ நீலமேகம். வெங்கடாசலபதி அய்யர் அவர்கள், மதுரை:-

ஸௌராஷ்ட்ரர்கள் வசிக்குமிடங்களில் மஹிமைகளேற்படுத்துவதினாலும், குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதினாலும், உபந்நியாச சபைகளேற்படுத்துவதினாலும்தான் நம்முடையவர்களுக்குள் ஒற்றுமை, வாக்குச் சாதுர்யம், பிரசங்க சக்தி, கல்வி அபிவிருத்தி முதலிய நன்மைகள் தினேதினே விருத்தி அடையுமென்று சொல்லி உபந்நியாச சபைகள் வைக்கவேண்டுமென்று ஆமோதித்தனர்.

உபந்நியாச சபைகளேற்படுத்தினால் அநேக நன்மைகளுண்டாகுமென்றும், இவிடம் விஜயஞ்செய்திருக்கும் பிரதிநிதிகள் தங்கள் தங்கள் ஊர்களில் சபைகளை ஏற்படுத்தும்படி அக்கிராசனாதிபதி அவர்கள்தெரிவிக்க, சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டது.

பதினோராவது தீர்மானம்.

நாட்டு ஜவுளி வர்த்தகம்.

"ஜெர்மனி தேசத்து சாயப்பவுடர்களையும், மட்ட ஜரிகைகளையும், மெல்லிய ஜரிகைகளையும் உபயோகிப்பதில் நாட்டு ஜவுளி வர்த்தகமானது வரவர க்ஷீணித்து வருவதினால் அதை விருத்திக்குக் கொண்டு வரும்படியான வழிகளைத் தேடவேண்டுமென்பது".

பிரஹ்மஸ்ரீ முசுவாதி. குமாருசாமய்யர் அவர்கள், மதுரை:-

வடக்கேயுண்டான பிளேக் வியாதியினல் இரண்டு வருஷங்களாக நாட்டு ஜவுளி வர்த்தகமானது சுத்தமாயில்லையென்றும், மட்டச் சாயங்களைப் போடுவதினலும், கரூர் விலை இல்லாததினலும், ஒற்றுமைக் குறைவினலும் வியாபாரம் கெட்டுப் போயிருக்கிறதென்றும், நம்முடைய வகுப்பார் ஒரே தொழிலை நம்பியிருப்பதினல் நமக்கு லாபமில்லையென்றும், உயர்ந்த தினுசு ஜரிகைகளை உபயோகித்து வர்த்தகர்களுக்கும் வாங்குபவர்களுக்கும் நம்பிக்கை உண்டாகும்படி செய்யவேண்டுமென்றும் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள், மதுரை:-

சேலம் பட்டு தினுசுகளுக்கு பவுடர் முதலிய போகிறசாயங்களைப் போடுகிறதினலும், பத்தாறு ஜோடிகள் முழம் குறைவாயிருப்பதினலும் வர்த்தகம் குறைந்து போகிறதென்றும், பவுடர் சாயங்களைப் போடுவதினல் நஷ்டத்துடன் நம்பிக்கைக் குறைவுமுண்டாகிறதென்றும், இன்று முதல் எல்லோரும் கெட்டிச்சாயங்களைப் போட்டு,நாணயமான தினுசுகளைச் செய்ய வேண்டுமென்றும் சொல்லி ஆமோதிக்க பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள் தம் ஊராரிடம் சொல்லி சீர்திருத்துவதாக ஒப்புக்கொண்டார்.

பிரஹ்மஸ்ரீ கொண்டி. சொக்கய்யர் அவர்கள், சேலம்:-

கரூர் விலை வைத்து வியாபாரம் செய்யவேண்டுமென்றும், ஜோடி வேஷ்டியில் ஒரு வேஷ்டி 4 முழமும், மற்றொரு வேஷ்டி 5 முழமும் வைக்கிருர்களென்றும், பாவுக்கு 50 நிர். நூல் போட்டால் ஊடுக்கு 20 நிர். 30 நிர். போட்டு நெய்கிருர்களென்றும், குறைந்த விலைக்கு சரக்குகளைக் கொடுப்பதால் வர்த்தகத்தில் லாபமில்லாமல் வரவர கெட்டுப்போகிறதென்றும், இனிமேலாக கெட்டிச் சாயங்கள் போட்டு நாணயமான சரக்குகளை உண்டாக்கி கரூர் விலைக்கு விற்கவேண்டுமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

பிரஹ்மஸ்ரீ அன்ன. திருமலய்யர் அவர்கள், செவ்வாய்ப்பேட்டை:-

நயமான தினுசுகள் தயாரித்து கெட்டிச் சாயங்களைப் போட்டு ஒற்றுமையாக வர்த்தகம் செய்தால் தக்க லாபம் கிடைத்து முன்னுக்கு வரலா

மென்றும், ஒருதரம் ஜவுளி வாங்கிய வர்த்தகர்கள் மறுபடியும் வாங்க பயப் படுகிருர்களென்றும், நாம் பல தொழில்களைச் செய்தால் அதிக லாபம் அடையலாமென்றும், பட்டு வாவழைக்கும் வர்த்தகனுக்கு ஒருதரம் ரூ. 100 நஷ்டம் வந்தால் பாபராய் போய் விடுகிருனென்றும், இதர வியாபாரங் களில் ரூபாய்க்கு ஒரு அணு முதல் இரண்டணு வரை லாபம் கிடைத்தால் நம்முடைய வியாபாரத்தில் ரூ. 28 விலையுள்ள சேர் ஒன்றுக்கு இரண்டணு அதாவது ரூபாய் ஒன்றுக்கு காலணு வீதம் தான் லாபம் கிடைக்கிறதென் றும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டார்.

பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை அச்சி. கோபால்சாமய்யர் அவர்கள்,

செவ்வாய்ப்பேட்டை, சேலம்:-

பட்டு வியாபாரம் செய்வதில் லாபமில்லையென்றும், கெட்டிச்சாயம் போட்டு நாணயமான சரக்குகளைச் செய்விப்பதாயும், அதற்கு தாம் உத்தர வாதியாயிருப்பதாகவும் சொன்னர்.

மேற்சொன்ன விதமாகவே ஒவ்வொருவரும் செய்யவேண்டு மென்று அக்கிராசனதிபதி அவர்கள் சொல்ல, சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கப்பட்டது.

## பன்னிரண்டாவது தீர்மானம்.

### அனுதரக்ஷகசாலை.

"அனுதைக் குழந்தைகளுக்கும் ஆதரவற்ற ஏழைக் குழந்தைகளுக் கும் கல்வி, கைத்தொழில்களைக் கற்றுக்கொடுப்பதுடன் அன்ன வஸ்திரங்கள் கொடுத்து ரக்ஷிப்பதற்காக அனுதரக்ஷகசாலைகள் வைக்கவேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ கே. எஸ். பி. நன்னுசாமி பாகவதர் அவர்கள், மதுரை:-

அனுதரக்ஷகசாலைகளை ஏற்படுத்த வேண்டுமென்றும், அவைகளை ஸ்தாபிப்பதற்காக திரவியம் வேண்டியிருப்பதால் திரவியம் சேகரிக்க வேண்டு மென்றும், காலஞ்சென்ற ஹைக்கோர்ட் ஜட்ஜ் ஸர் டி. முத்துசாமய்யர் முதலிய பிரமுகர்களும் பிறருடைய உதவியால் முன்னுக்கு வந்தார்களென் றும், நம்முடைய ஆயுள் நிச்சயமில்லாதிருப்பதால் நாம் நினைத்தவுடனே

தர்மம் செய்ய வேண்டுமென்றும், வேகிற வீட்டிற்கும் வெட்டுகிற கிணற்றிற்கும் எட்டாதென்றும், பின்னல் தருமம் செய்யலாமென்றிருப்பது சரியல்லவென்றும், பல சுலோகங்களையும், கபிலர், அகவல் முதலிய செய்யுள்களையும் சொல்லி பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ பென்னுடம். நன்னய்யர் அவர்கள்,

பிரஹ்மஸ்ரீ பென்னுடம். நாகேந்திரய்யர் அவர்கள், இராசிபுரம், சேலம்:—

வித்தியாதானமே சிரேஷ்டமான தானமென்றும், இராசிபுரத்தில் 10 வருஷகாலமாய் ஒரு பள்ளிக்கூடம் வைத்து தாங்கள் நடத்தி வருகிறதாகவும், நம்முடைய குழந்தைகளுக்கு ஸௌராஷ்ட்ரமென்கிற சுயபாஷை, தேசபாஷை, ராஜபாஷைகளாகிய இம்மூன்று பாஷைகளையும் கற்றுக்கொடுக்கவேண்டியது அவசியமென்றும், இதர ஊர்களிலும் அனுதாக்ஷக சாலைகள் ஏற்படுத்த வேண்டுமென்றும் சொல்லி ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ முராரி. ரெங்கய்யர் அவர்கள், சேலம்:-

மானிடராய்ப் பிறந்தவர்கள் தர்மார்த்த காம மோக்ஷமென்னும் சதுர்வித புருஷார்த்தங்களையும் அடைய முயலவேண்டுமென்றும், இவைகளை அடைவதற்குக் கல்வியே காரணமாயிருக்கிறதென்றும், அனுதாக்ஷகசாலைகளை ஏற்படுத்தி ஏழைக் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க வேண்டுமென்றும், ஓதாமலொருநாளுமிருக்கவேண்டாமென்ற உலகநீதிக்கிணங்க குழந்தைகளுக்கு சந்தியாநுஷ்டானங்களைக் கசடறத் தெரிய ஓதிக்கொடுக்கவேண்டுமென்றும், வெள்ளைத் துணியில் எப்படி சாயம் ஏறுகிறதோ அப்படியே கல்வி கற்றுக்கொள்வதற்கு இளமைப் பருவமே தகுதியானதென்றும், எவ்வித பிரயாசை எடுத்துக்கொண்டாவது தனம் சேர்த்து அனுதாக்ஷக சாலைகளை ஆங்காங்கு ஸ்தாபிக்கவேண்டுமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

அனுதாக்ஷக சாலைகளை ஏற்படுத்துகின்ற விஷயமானது மிகச் சிறந்த விஷயமாகையால் அதைப்பற்றி எல்லோரும் கவனிக்கவேண்டுமென்று அக்கிராசனதிபதி சொல்ல, சபையோர் எல்லோராலும் கரகோஷத்துடன் அங்கீகரிக்கலாயிற்று.

## பதிமூன்றாவது தீர்மானம்.

### உபநயனம்.

"ஸௌராஷ்ட்ர குழந்தைகளுக்கு ஆறு வயது முதல் எட்டு வயதிற்குள் உபநயனம் செய்யவேண்டுமென்பது."

பிரஹ்மஸ்ரீ பென்னூடம். வெங்கட்ராமய்யர் அவர்கள், சேலம்:-

காலாகாலத்தை அறிந்து உபநயனம் செய்யவேண்டுமென்றும், அகாலத்தில் உபநயனம் செய்வது பிராஹ்மண ஆசாரத்திற்கு விரோதமென்று சாஸ்திரங்கள் முறையிடுகிறதென்றும், சக்தி இல்லாதவர்களுக்கு திரவிய சகாயம் செய்தாவது உபநயனம் செய்விக்க வேண்டுமென்றும் சொல்லி உபநயன விஷயத்தைப் பிரேரேபித்தனர்.

பிரஹ்மஸ்ரீ பரமக்குடி. இராசலய்யர் அவர்கள், சேலம்:-

"பிச்சை புகினும் செய்வன செய்" என்பது ஆன்றோர் மொழி ஆகலால் பிச்சை எடுத்தாவது உபநயனம் செய்யவேண்டுமென்று ஆமோதித்தனர்.

பிரஹ்மஸ்ரீ லகுடு.வா. வெங்கடாசலபதி அய்யர் அவர்கள், சேலம்:-

சிலர் கல்யாணத்தின் போது உபநயனம் செய்வது சரியல்லவென்றும், கல்யாணமும் நாகவல்லியும் அவசரப்பட்டு ஒரே தினத்தில் முடிப்பது சரியல்லவென்றும், சுஜாதியார் பொருளுதவிசெய்து ஏழைகளுக்கு உபநயனம் செய்விக்க வேண்டுமென்றும் சொல்லி ஆதரித்தனர்.

உபநயனத்தை சரியான காலத்தில் விதிப்படி சாங்கோபாங்கமாய்ச் செய்யவேண்டுமென்று அக்கிராசனாதிபதி அவர்கள் சொல்ல, சபையோரெல்லோராலும் ஏகோபித்துடன் அங்கீகரிக்கலாயிற்று.

## பதினான்காவது தீர்மானம்.

### அடுத்த மஹாநாடு.

நான்காவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாடானது திருச்சினாப்பள்ளியில் நானது௵ மாசி௴ பௌர்ணமியின் போது கூடவேண்டுமென்று

அக்கிராசனாதிபதி அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, மதுரை பிரஹ்மஸ்ரீ வி.எஸ்.கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள், சேலம் பிரஹ்மஸ்ரீ லகுடுவா. வெங்கடாசலபதி அய்யர் அவர்கள், திருச்சினாப்பள்ளி பிரஹ்மஸ்ரீ வி. என். இராமசாமி அய்யர் அவர்கள் ஆகியவர்களால் ஆமோதிக்கப்பட்டு, பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்களால் திருச்சினாப்பள்ளியானது சென்னை ராஜதானியில் இரண்டாவது முக்கிய நகரமாயும், நம்முடையவர்களெல்லோரும் வருவதற்கு மத்திய ஸ்தலமாயும், எல்லோருக்கும் சமீபமாயுமிருக்கிற காரணத்தால் திருச்சினாப்பள்ளியில் கூடுவது உத்தமமென்று ஆதரிக்கப்பட்டு, சபையோரால் கரகோஷத்துடன் அங்கீகரிக்கலாயிற்று.

கலம்பகத் தீர்மானங்களும், அறிவிப்புகளும்:—

1. ஆசார விசாரணைக் கர்த்தாவை சேலத்தில் இவ்வருஷம் நியமிக்கிறதென்பதாய் நோட்டீஸ்கள் கொடுக்கப்பட்டிருந்தபோதிலும் அடுத்த மஹாநாட்டில் அது யோசிக்கப்படுமென்றும், ஆசார விசாரணைக் கர்த்தாவை மூன்று வருஷத்துக்கொருதரம் நியமிக்கிறதென்றும், அவர் கிரகஸ்தராய் இருக்கலாமென்றும், வம்சபாரம்பரியம் தேவையில்லையென்றும், சைவ, வைஷ்ணவ, மத்வ, வடகலை, தென்கலை இவைகளில் எந்த சம்பிரதாயத்தரானபோதிலும் நல்லவித்வானாய் இருக்கவேண்டுமென்றும் சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. ராமசாமய்யரவர்கள் தெரிவித்ததின்பேரில், மதுரை பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமய்யர் அவர்களும், சேலம் பிரஹ்மஸ்ரீ புட்டா. அளகரய்யர் அவர்களும் ஆமோதித்தனர்.

2. பாண்டித்யராயும், சிஷ்டராயுமிருக்கிற ஆசார விசாரணைக் கர்த்தாவை நியமிக்கவேண்டுமென்றும், கல்வி, கைத்தொழில் முதலியவைகளை விருத்திசெய்ய வேண்டுமென்றும், இதே மாதிரி மஹாநாடு பிரதிவருடமும் நடத்தப்படவேண்டுமென்றும், சேலத்தில் கூடியிருக்கும் மஹாநாடு மிகவும் பிரசித்தமானதென்றும், "ஸௌராஷ்ட்ர மித்திரன்" என்னும் மாதாந்தரப் பத்திரிகை பிரசித்தம் செய்யவேண்டுமென்றும் பெங்களூர் பிரஹ்மஸ்ரீ முத்தான். சுப்பய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

3. ஆசாரமாயுள்ளவரை ஆசார விசாரணைக் கர்த்தாவாக நியமிப்பது மிகவும் நலமென்று இராசிபுரம் பிரஹ்மஸ்ரீ அனந்து.செல்வய்யர் அவர்களும்,

சேலம் பிரஹ்மஸ்ரீ அச்சி. நாராயணசாமய்யர் அவர்களும் தெரிவித்துக் கொண்டனர்.

4. பிரஹ்மஸ்ரீ முரார்ரி. முராரய்யர் அவர்கள் சாஸ்திரோக்தமான தர்மங்களையும், ஆசார கர்மானுஷ்டான விஷயங்களையும் விசேஷமாய் பிரசித்தப்படுத்திக் கொண்டிருப்பதுமல்லாமல், இனியும் நம்மவர்கள் இருக்குமிடங்களில் பிரசித்தம் செய்யவேண்டுமென்று சேலம் பிரஹ்மஸ்ரீ லகுடுவா. சே. நரசிம்மய்யர் அவர்கள் வற்புறுத்தினர்.

5. கூலிக்காரர்களுக்குச் சரியான கூலி கொடுக்கவேண்டுமென்று சேலம் பிரஹ்மஸ்ரீ சிங்கு. வெங்கடாசலபதி அய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

6. பிரதி வருடமும் இதே மாதிரி மஹாநாடு ஒவ்வொரு ஊரிலும் கூடவேண்டுமென்று சேலம் பிரஹ்மஸ்ரீ பாரகிரி. கி. நரசிம்மய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

7. ஜன்மமெடுத்தபோது சூத்திரத்துவமும், உபநயனாதி கர்மங்களினால் பிராஹ்மணத்துவமும் உண்டாகிறதாகையால் ஆசாரமே முக்கியமென்றும், அன்னதான, ஸ்வர்ண தானங்களைவிட வித்தியாதானம் பிரதானமென்றும் சேலம் பிரஹ்மஸ்ரீ முராரி. இரங்கனையகுலய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

8. சகல காரியங்களுக்கும் தனமே மூலமாதலால் மஹிமை பண்டு ஏற்படுத்தவேண்டுமென்றும், மதுரையிலும் சேலத்திலுங் கூடிய மஹாநாட்டிற்கு கும்பகோணத்திலிருந்து பிரதிநிதிகள் வாராததைப்பற்றித் தீர்க்கமாய்க் கவனிக்க வேண்டுமென்றும் மதுரை பிரஹ்மஸ்ரீ தாடா. ரெங்கசாமய்யர் அவர்கள் குறிப்பாய்த் தெரிவித்தனர்.

9. மஹிமை ஏற்படுத்துகிற விஷயத்தை நாளை முதல் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர வேண்டுமென்றும், அது விஷயமாய் பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள் மிக சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், மதுரை பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

10. சேலம் பிரஹ்மஸ்ரீ எம். என். ராமசாமய்யர் அவர்களும், பிரஹ்மஸ்ரீ பாரகிரி. கொ. நரசிம்மய்யர் அவர்களும் மஹிமை ஏற்படுத்தும் விஷயத்தில் மதுரையிலும், கும்பகோணத்திலும் அனுஷ்டிக்கப்படும் ரூல்களைத் தருவித்துக் கவனித்துச் செய்யவேண்டுமென்று தெரிவித்தனர்.

11. மதுரை பிரஹ்மஸ்ரீ தூமாட்டி. ரெங்கசாமய்யர் அவர்கள் ஸௌராஷ்ட்ர ஸ்கூல் பண்டு தக்கவரிடத்தில் இருக்கவேண்டுமென்றும், அவசியம் மஹிமை ஏற்படுத்தவேண்டுமென்றும் தெரிவித்தனர்.

12. நதி தீரங்களில் ஸ்நானபானுதிகளுக்கு அனுகூலமாயிருக்கும் பொருட்டு நம்மவர்களுக்காக படித்துறைகள் ஏற்படுத்தவேண்டுமென்று சேலம் பிரஹ்மஸ்ரீ புட்டா. ராமச்சந்திரய்யர் அவர்கள் தெரிவித்தனர்.

13. வடகலையானுலும், தென்கலையானுலும் பேதம் எண்ணக்கூடாதென்றும், அப்படி எண்ணியதால் பஜனைமடம் கெட்டுப் போயிருக்கிறதென்றும் சேலம் பிரஹ்மஸ்ரீ பதிங்கா. நரசிம்மய்யர் அவர்கள் தெரிவித்துக் கொண்டனர்.

14. ஸௌராஷ்ட்ரர்கள் மைதில கௌடர்களென்றும், கோபி சந்தன பஞ்ச முத்திரை தாரணம் நமக்கேற்பட்டதென்றும், மதுரையிலும் சிலர் அப்படியே செய்கிருர்களென்றும் மதுரை பிரஹ்மஸ்ரீ செல்வரெங்க ஜோஸியர் அவர்கள் தெரிவித்தனர்.

15. சேலம் பாங்கிகளிலும், ஸௌராஷ்ட்ர வர்த்தக கம்பேனிகளிலும் வேலைக்கு நம்மவர்களையே வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், வித்தியாபிவிருத்தியும், கெட்டிச்சாயம், ஆசாரவிருத்தி, வர்த்தகவிருத்தி ஸபைகளை ஸ்தாபித்தல் முதலிய விஷயங்களை அதிகமாய்க் கவனிக்கும்படிக்கும் பிரஹ்மஸ்ரீ எல். கே. துளசிராமய்யங்கார் அவர்கள் கேட்டுக் கொண்டனர்.

16. மஹிமை விஷயத்தை மறுநாள் முதல் ஊர்ஜிதத்திற்குக் கொண்டுவரவேண்டியிருப்பதால் அதற்கேதாவது ஆக்ஷேபணையுள்ளவர்கள் தெரிவிக்கலாமென்று பிரஹ்மஸ்ரீ நாட்டாண்மை. பட்டணம் சுப்பய்யர் அவர்கள் அறிவித்தனர்.

17. மதுரையில் கூடிய இரண்டாவது ஸௌராஷ்ட்ர பிராஹ்மண் மஹாநாட்டில் பெங்களூர் ஹிந்து சமய உபந்நியாசகரான பிரசங்கக் களஞ்சியம் மகா-ள-ள-ஸ்ரீ கொ. முத்துவிஜயரெங்க முதலியார் அவர்கள் ஸௌராஷ்ட்ர லிபியை முன்னுக்குக் கொண்டுவரும் பொருட்டு உதவி புரிய வேண்டுமென்று கேட்டுக்கொண்டதின் பேரில் ரூ. 400-க்குமேல் வசூலாகியிருக்கிறபடியால், எப்படியாவது ஸௌராஷ்ட்ர லிபியை முன்னுக்குக் கொண்டுவரவேண்டுமென்று பிரஹ்மஸ்ரீ புட்டா. அழகரய்யர் அவர்கள் கேட்டுக்கொண்டனர்.

18. பிரஹ்மஸ்ரீ வி. எஸ். கிருஷ்ணசாமய்யர் அவர்கள், மதுரை.
,, புட்டா. அழகரய்யர் ,, சேலம்.
,, கௌடு. இராமலிங்கய்யர் ,, மதுரை.
,, தொ. சீ. மு. சேஷய்யர் ,, ,,

இந்நால்வரையும் ஸௌராஷ்ட்ர பாஷா லிபியை முன்னுக்குக் கொண்டுவரும் பொருட்டு சென்னைக்கு அனுப்புவதென்று தீர்மானிக்கலாயிற்று.

அக்கிராசனாதிபதி அவர்களுக்கு வந்தனம்.

இம்மஹாநாட்டிற்கு மூன்றுநாள் வரையும் அக்கிராசனாதிபதியாய் வீற்றிருந்த உறையூர் பிரஹ்மஸ்ரீ அறந்தாங்கி. கஸ்தூரிரெங்கய்யர் அவர்களையும், கடைசி நாள் அக்கிராசனாதிபதியாய் வீற்றிருந்த திருச்சினாப்பள்ளி பிரஹ்மஸ்ரீ கொப்பு. இராமசுவாமி அய்யர் அவர்களையும், மஹாநாட்டிற்கு அன்புடன் வந்திருக்கும் பிரதிநிதிகளையும், மஹாநாட்டில் பிரசங்கித்த கனவான்களையும் கடவுள் என்றும் கடாக்ஷிப்பாரென்று வாழ்த்துக் கூறி, அவர்களுடைய நன்றியறிதலுக்காக மதுரை பிரஹ்மஸ்ரீ தொ. சீ. மு. சேஷய்யர் அவர்கள் வந்தனஞ் செய்யவே, சபையோர் எல்லோரும் அடங்காத ஆனந்தத்துடனும், ஆரவாரத்துடனும் கரகோஷம் செய்தனர்.

மாட்சிமை தங்கிய மஹாராணியம்மாள் அவர்களுக்கு
மங்கள வாழ்த்து.

ஸௌராஷ்ட்ர பிராஹ்மண மஹாநாடானது மேன்மேலும் விருத்தியாக வேண்டுமென்றும், மன்னுயிரை எல்லாம் தன்னுயிர்போல் நினைத்துக் காத்து நம்மை ஆண்டு வரும் கருணைக் கடலாகியும், ஈவு, இரக்கம், தயை

